Regd. No. M. 5934 Phone No. 21841

# ஜனசக்தி

ஆசிரியர்: ப. ஜீவானந்தம் JANASAKTHI

(காலைப் பதிப்பு)



மலர் 16 இதழ் 29] சென்னை 14-9-59 விகாரி ௵ ஆவணி ௴ 29௳ திங்கட்கிழமை [4 பக்கங்கள் 7 காசுகள்

# சோவியத் ராக்கெட் இன்று சந்திரனில் இறங்குகிறது!

## எல்லை விஷயத்தில் சமரச மூலம் தீர்வுகாண்பதே முறை

### மக்கள் சபையில் எஸ். ஏ. டாங்கே பேச்சு

### சீனு இந்தியாவை ஆக்கிரமிக்காது என்று உறுதி

புதுடில்லி, செப். 13—

**வரையறுக்கப்படாத இந்திய-சீன எல்லை விஷயத்திற்கு பேச்சுவார்த்தையின் மூலம் தீர்வு காணப்படவேண்டும் என்று நேற்று பாராளுமன்ற மக்கள் சபையில் தோழர் எஸ். ஏ. டாங்கே பேசுகையில் கூறினர்.**

இந்திய-சீன எல்லை விஷயமாக நடைபெற்ற விவாதத்தில் பங்கெடுத்துக் கொண்ட தோழர் டாங்கே தொடர்ந்து பேசுகையில், "இன்றுசபையின் முன்னுல் இருக்கும் விஷயம் எல்லா முனைகளிலிருந்து பார்த்தாலும் மிகக் கடுமையான தென்றே தெரிய வரும். ஆனல் இக்கடுமையான விஷயம் இரு நாடுகளில் எந்தவொரு நாட்டிற்கோ, ஏன்? உலகத்திற்கோ அபாயத்தை விளைவிக்காமல் இருக்கும் படியாக நாம் பார்த்துக்கொள்ள வேண்டும். இந்த விஷயத்தை யுத்தச் சூழ்நிலையிலோ அல்லது யுத்தக் கெடுபிடி நிலை மூலமாகவோ தீர்த்துக்கொள்ள முடியாது. சமாதானமாக பேச்சுவார்த்தையின் மூலம் தீர்வு காண்பதற்கே முயல வேண்டும். நம் முன்னுல் இருக்கும் விஷயம் ஏற்கனவே ஒன்றுக்கொன்று பகைத்துக் கொண்டிருக்கின்ற இரு நாடுகளுடைய பிரச்சினை அல்ல. ஏற்கனவே தோழமை உறவோடு இருக்கும், ஒரு தோழமை உடன்பாட்டிற்கே வந்திருக்கும் இரு நாடுகளின் பிரச்சினையாகும். சீனத்திற்கு விரோதமாக அமெரிக்காவிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் இரண்டு எதிர்ப்பு முகாம்களை ஏற்படுத்த விரும்பும் நபர்களைத் தவிர, மற்றவர்களெல்லாம் இதனை ஒப்புக்கொள்வார்கள் என்றே நம்புகிறேன்" என்று கூறினர்.

இன்றைய பிரச்சினை எல்லை விஷயம் மட்டுமல்ல, தேசப்பட பிரச்சினை மட்டுமல்ல, திபேத்திய கலவரத்திற்குப் பின்னர் அரசியல் உறவிலும் பிரச்சினை ஏற்பட்டிருக்கிறது. இந்தியா மக்மஹோன் எல்லைக்கோட்டை ஒத்துக்கொண்டிருக்கிறது. சீனம் மக்மஹோன் எல்லையைக் கொள்கையளவில் ஒத்துக் கொள்ளாவிட்டாலும், அவர்கள் கலந்து பேசி பிரச்சினைக்குத் தீர்வு காணவே விரும்புகிறர்கள் என்று எண்ணுகிறேன் என்ருர். இந்திய—சீன அரசியல் தகராறு பற்றி தோழர் டாங்கே குறிப்பிட்டுப் பேசுகையில், "திபேத்திய சம்பவங்களால் சீன மக்கள் மிகவும் கசப்படைந்துள்ளனர் என்பதை நேருவும் குறிப்பிட்டார். எவருக்கும் அடைக்கலம் தருவதற்கு இந்தியாவிற்கு உரிமை உண்டு ஆனல் தலாய் லாமா இந்திய மண்ணை திபேத் விவகாரத்தில் ஐ. நா. தலையிட வேண்டுமென்பதற்காக, சீனத்தின் மீது குற்றச்சாட்டுக்களின் பட்டியல் தயாரிப்பதற்காகப் பயன்படுத்துகிறர்" என்று கூறினர்.

#### கிருபளானிக்குச் சூடு!

சபையில் அமர்ந்திருந்த கிருபளானி (பி. சோ. கட்சி) இடைமறித்து, "இந்தியாசதந்திர நாடு. இங்கு எவரும் தங்கள் கருத்துக்களைதாராளமாகக் கூறலாம்" என்று கூறினர்.

கிருபளானிக்குச் சுடச் சுட பதிலளித்து தோழர் டாங்கே பேசுகையில், "இப்படிக் கூறுவது மிகவும் அழகாகத்தான் இருக்கிறது! தங்களையே ஒரு அரசாங்கம் என்று அழைத்துக்

(4-ம் பக்கம் பார்க்க

#### சூயென்-லாய் கடிதம்

தோழர் டாங்கே மேலும் பேசுகையில், "யுத்தத்தின் மூலம் அல்லாது சமரசமான பேச்சுவார்த்தையின் மூலம் எல்லை விஷயத்திற்கு தீர்வுகாண வேண்டுமென்று நேரு கூறிய அடிப்படைக் கருத்தை நான் வரவேற்கிறேன். எனினும் நேரு ராஜ்யசபையில் பேசுகையில் இரு தரப்பிலும் எவ்விதம் அணுகுவது என்ற பிரச்சினை இருப்பதாகக் குறிப்பிட்டார். சூயென்-லாய் இந்தியப் பிரதமருக்கு செப். 8ம் தேதி எழுதிய கடிதத்தில் அணுகுவதற்கான சந்தர்ப்பத்தைக் கொடுத்திருக்கிறர் என்பதை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். இந்தக் கடிதம் சற்று முன்னரே வந்திருக்குமானல் ஒரு வேளை எல்லை விஷயத்தில் ஏற்பட்டிருக்கும் இன்றைய நெருக்கடி நிலைமை குறைந்திருக்கக்கூடும்.

## ரயில்வேலேபர்யூனியன் 18-வது மகாநாடு

### டாங்கே நகரில் ஆரம்பமாகியது

### தொழிற்சங்கத் தலைவர்கள் கலந்துகொண்டார்கள் எங்கும் கரைகாணு உற்சாகம்

திருச்சி, செப். 12—

ரயில்வே லேபர் யூனியனின் 18-வது மகாநாடு பொன்மலையில் டாங்கே நகரில் இன்று ஆரம்பமாகியது. கண்ணையும் கருத்தையும் கவரும் முகப்பு அலங்காரம் தொழிலாளி வர்க்கத்தின் கைத்திறனை எடுத்துக் காட்டியது. தொழிற்சங்க சின்னம் பொறித்த செங்கொடி பட்டொளி வீசிப் பறந்தது, தொழிலாளி வர்க்கத்தின் பொற்காலம் விரைந்து வருகிறதென்பதை கோடிட்டுக் காட்டியது. பாரதி கலையரங்கத்தில் வீற்றிருந்த ஆயிரக்கணக்கான பிரதிநிதிகள், தொழிலாளி வர்க்கத்தின் தன்னிகரில்லாத தலைவர்கள், கூடியிருந்தோரின் உள்ளத்திலே புதிய உற்சாகத்தை ஏற்படுத்தினர்.

பிரதிநிதிகள் தங்குவதற்கும், உணவு அருந்துவதற்கும் போதுமான வசதியை ரயில்வே தொழிலாளி வர்க்கம் செய்து கொடுத்துள்ளது.

இன்றைய நிகழ்ச்சி சங்கரநயினர்கோவில் சகோதரர்களின் நாதஸ்வர இன்னிசையுடன் ஆரம்பமாகியது. தென்பிராந்திய ரயில்வே யூனியன் மத்திய சங்கத் தலைவர் திரு. எம். கல்யாணசுந்தரம் தலைமை வகித்து மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார். அவரது உடல்நிலை சரியில்லாத காரணத்தினல் உபதலைவர் சி. பார்த்தசாரதி தலைமை வகித்து தொடர்ந்து மகாநாட்டை நடத்தினர்.

தொழிற்சங்கத் தலைவர்களாகிய பி. ராமமூர்த்தி, கே. டி. ராஜு, கே. டி. கே. தங்கமணி, எம்.பி., ராஜ்பகதூர் கௌட், எம்.பி., கே. எம். சுந்தரம், உமாநாத், அனந்தநம்பியார், என். கிருஷ்ணசாமி, சுகுமாரன், ஆகியோர் மேடையில் அமர்ந்திருந்தனர்.

ரயில்வே லேபர் யூனியன் பொதுக் காரியதரிசி அனந்த நம்பியார் மகாநாட்டில்அறிக்கை சமர்ப்பித்தார். அறிக்கையின் மீது பல பிரதிநிதிகள் பேசினர். திரு அனந்த நம்பியார் அறிக்கையைச் சமர்ப்பித்துப் பேசும் போது, ரயில்வே தொழிற்சங்க ஒற்றுமை, சம்பளக் கமிஷன் அறிக்கை, தொழிலாளர்களின் உடனடிப் பிரச்சினை பற்றி சங்கம் எடுக்க வேண்டிய நடவடிக்கைகள் பற்றியும் குறிப்பிட்டார்

மகாநாட்டை வாழ்த்தி சீன, ரஷ்யா, பல்கேரியா, முதலிய நாடுகளிலுள்ள சகோதரத் தொழிற்சங்கங்களிலிருந்து வாழ்த்துச் செய்திகள் வந்தன.

திரு கே. டி. கே. தங்கமணி கொடியேற்றி வைத்துப் பேசினர். மகாநாடு தொடர்ந்து நடைபெற்றுக் கொண்டிருக்கிறது (ந. நி.)

## குருஷ்சேவ் அமெரிக்கா சேருமுன் அது சந்திரனில் இறங்கிவிடும்

### ரஷ்யாவின் மற்ருெரு அபாரசாதனை

மாஸ்கோ, செப். 13—

**ரஷ்ய ராக்கெட் ஒன்று, மணிக்கு 25 ஆயிரம் மைல் வேகத்தில் நேற்றிரவு சந்திரனை நோக்கி விரைந்து சென்றது.**

**திங்கட்கிழமையன்று காலையில்-அதாவது சோவியத் பிரதமர் குருஷ்சேவ், அமெரிக்காவில், தன் விஜயத்தை ஆரம்பிப்பதற்கு முதல் நாளன்று-அந்த ராக்கெட்டானது தன்னுடைய குறிக்கோளை எட்டிவிடும்.**

நேற்று சனிக்கிழமை அதிகாலையில், பல கட்ட, ராட்சத ராக்கெட், எந்தப் பாதையில் செல்லவேண்டுமென்று சோவியத் விஞ்ஞானிகள் செலுத்தினர்களோ, அதே பாதையில் வெற்றிகரமாக குறிதவறாமல் விரைந்து சென்றது.

சென்ற தடவை ஏவப்பட்ட ராக்கெட்டானது, சந்திரனைச் சுற்றிவிட்டு சூரியனை நோக்கிச் சென்றது. இப்பொழுது ஏவப்பட்ட ராக்கெட்டின் கடைசிக் கட்டமானது நேரடியாக சந்திரனிலேயே இறங்கும் என்று மாஸ்கோ வானெலி அதிகார பூர்வமாக ஒலிபரப்பியது.

#### திங்கள் காலை 2-35

இந்திய நேரப்படி 14-9-59 திங்கட்கிழமை அதிகாலையில் 2-35 மணிக்கு, ரஷ்ய ராக்கெட் சந்திரனில் இறங்கும் என்று எதிர்பார்க்கப்படுவதாக சோவியத் அறிக்கையொன்று கூறுகிறது.

இவ்வருடம் ஜனவரி 2-ம் தேதியன்று சந்திரனை நோக்கி ரஷ்யா ஏவிய முதல் ராக்கெட்டானது, ஏவிய பின் 2½ நாட்கள் கழித்து சந்திர மண்டலத்துக்கு அருகில் சென்றது.

முதலில் ஏவப்பட்ட லூனிக், பூமியின் ஆகர்ஷண சக்தியிலிருந்து விடுபட்டு சந்திரனையும் தாண்டி, சூரிய மண்டலத்தில் ஒரு கிரகமாக நிற்கிறது.

அமெரிக்கா இது போன்ற ராக்கெட்டை ஏவ முயற்சித்து, 4 தடவை தோல்வியடைந்தது.

#### பின் வந்த செய்தி

தங்கள் நாட்டின் பிரதம மந்திரி குருஷ்சேவை, அமெரிக்காவின் ஜனதிபதியான ஐசன்ஹோவருடன் பேச சமாதானத் தூதுவராக அனுப்பப் போகிறேம் என்ற பெரு மகிழ்ச்சியில், சோவியத் மக்களெல்லாம் வழியனுப்பு விழாவுக்கான மகத்தான தயாரிப்புகளில் மும்முரமாக ஈடுபட்டுக்கொண்டிருக்கும்போது சந்திரனிலேயே இறங்குவதற்கு காஸ்மிக் ராக்கெட் ஏவப்பட்டு விட்டது என்ற செய்தியை மாஸ்கோ வானெலியில் கேட்டு எல்லையற்ற ஆனந்தத்தில் ஆழ்ந்தார்கள்.

அந்த ராக்கெட்டில் உயிர்ப் பிராணிகள் எதுவுமில்லை. என்றலும் அதில் பூமண்டலத்தின் காந்த சக்தி எவ்வளவு, சந்திர மண்டலத்தின் காந்த சக்தி எவ்வளவு என்பதையெல்லாம் அளந்து காட்டி ரேடியோ மூலம் பூமிக்கு செய்தி அனுப்பக்கூடிய விஞ்ஞானக் கருவிகள் இருக்கின்றன.

நிச்சயம் இந்த ராக்கெட் சந்திரனில் இறங்கி விடுமென்று சோவியத் விஞ்ஞானிகள் எதிர்பார்க்கிறர்கள். மாஸ்கோ வானெலியில் கிடைத்த செய்தியைக் கொண்டு, மாஸ்கோ நகர மக்கள் பின்வருமாறு பேசுகிறர்கள்:

இவ்வருட ஆரம்பத்தில் சந்திரனைச் சுற்றிச் செல்ல லூனிக் ராக்கெட்டை ஏவுவதில் வெற்றி பெற்று விட்டதாலும், இப்பொழுது சந்திரனுக்கே ராக்கெட் விடுவதிலும் வெற்றி கிடைக்கவிருப்பதாலும், வானவெளியை வெற்றிகொள்ளுவது ஊர்ஜிதமாகிவிட்டது என்றும், வானவெளியில் பயணம் செய்து ஆராயவும், கிரகங்களுக்கிடையே பயணம் ஆரம்பிக்க வழி தெரிந்துவிட்ட தாகவும் பேசிக்கொள்கிறர்கள் என்று அசோஸியேடட் பிரஸ் செய்தியும், டைம்ஸ் ஆப் இந்தியா செய்தி ஸ்தாபனமும் தெரிவிக்கின்றன.

#### 2¼ லட்சம் மைல்

பூமிக்கும் சந்திரனுக்குமசுமார் 2,40,000 மைல் தூரமிருக்கிறது, சந்திரனின் குறுக்களவு சுமார் 2160 மைல்.

#### விடிைக்கு 7 மைல்

இப்பொழுது ஏவப்பட்டிருக்கும் ராக்கெட்டின் கடைசிக் கட்டமானது 2-வது காஸ்மிக் வேகத்தைக் காட்டிலும் அதிக வேகத்துடன் செல்லுமாம். அதாவது விநாடிக்கு — (சொடக்கடி நேரம், கண்மூடி கண் திறக்கும் நேரம்) 7 மைல்களுக்கு மேல் போகுமாம்.

#### சந்திரனை நோக்கி விரைகிறது

லண்டன், செப். 13—

இன்று இரவு 8-30 மணிக்கு (இந்திய நேரப்படி) சோவியத் அண்ட வெளி ராக்கெட் பூமியிலிருந்து 1,99,640 மைல் (3,22,000 கிலோமீட்டர்கள்) தூரத்திலும், சந்திரனிலிருந்து 33,500 மைல் (54,000 கிலோமீட்டர்) தூரத்திலும சென்று கொண்டிருக்கிறது, என்று மாஸ்கோ ரேடியோ அறிவிப்பு ஒன்று கூறியது.

ரேடியோ நிலையங்களில் அந்த ராக்கெட்டிடமிருந்து தொடர்ந்து விஞ்ஞான ரீதியான தகவல் கிடைத்து வருகிறது, என்றும் மாஸ்கோ ரேடியோ அறிவிப்பு கூறியது.

சோவியத் ராக்கெட் ஒரு விநாடிக்கு 2 மைல் வேகத்தில் செல்கிறது; 14-ந் தேதி காலை 2-31 மணிக்கு சந்திரனில் இறங்குமென்று மாஸ்கோ செய்தி கூறுகிறது.

### வங்க உணவு போராட்டத்தின் முதல் வெற்றி

கல்கத்தா, செப். 12—

உணவுப் போராட்டம் சம்பந்தமாக சிறைப்படுத்தப்பட்ட அனைவரையும் விடுதலை செய்ய மேற்கு வங்க சர்க்கார் முடிவு செய்திருப்பதானது உணவுப் போராட்டத்தின் முதல் பெரும் வெற்றியாகுமென்று போராட்டத் தலைவர்கள் கூறினர்.

மக்களிடை அதிருப்தியும் மனக் கொதிப்பும் வளர்ந்து கொண்டிருப்பதால் மேற்குவங்க சர்க்கார் பணிந்து போகவும் தாராள மனப்பான்மை காட்டுவது போல் நடிக்கவும் கைதிகளை விடுதலைசெய்யவும் வேண்டியிருக்கிறதென்று உணவுப் போராட்டக் கமிட்டியின் பிரதிநிதி ஒருவர் கூறினர்

"உணவு மந்திரி பி. சி. சென் ராஜிநாமா செய்ய வேண்டும். இந்த முக்கிய கோரிக்கை நிறைவேற்றப்படவில்லை. ஆகவே போராட்டம் நீடிக்கும்" என்றும் போராட்டக் கமிட்டிப் பிரதிநிதி வற்புறுத்தினர்.

பலாத்காரம், நீதிமன்ற அவமதிப்பு இக் குற்றங்கள் புரிந்தவர்கள் தவிர சகல கைதிகளும் விடுதலையாவரென்றும் வாரண்டுகளும் வாபஸ் பெறப்படுமென்றும் சர்க்கார் அறிவித்துள்ளது. (ஐ பி. ஏ.)

### ஏ. வி. மெய்யப்ப செட்டியார் தாய்நாடு திரும்புகிறர்

சென்னை, செப். 14—

திரு. ஏ வி. மெய்யப்ப செட்டியார் அவர்கள் அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுகளில் தமது சுற்றுப்பிரயாணத்தை முடித்துக்கொண்டு இங்கிலாந்திலிருந்து பம்பாய் வழியாக இன்று (திங்கள்) இரவு 10 மணியளவில் சென்னை வந்து சேருகிறர்.

## இந்தியாவுக்கு ரூ. 177 கோடி சோவியத் கடன் உதவி

### மாஸ்கோவில் ஒப்பந்தம் கையெழுத்தாகியது

### 3வது ஐந்தாண்டுத் திட்டத்திற்கு இந்த உதவி அளிக்கப்படுகிறது

மாஸ்கோ, செப். 13—

**இந்திய சர்க்காருக்கு சோவியத் யூனியன் ரூ. 177½ கோடி (150 கோடி ரூபிள்) கடன் உதவி அளிக்கும ஒப்பந்தம் ஒன்று நேற்று இங்கு கையெழுத்தாகியது.**

இந்தியாவின் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தை அமுல் நடத்துவதற்காகவும், சோவியத் யூனியனுக்கும் இந்தியாவிற்குமிடையே வர்த்தகம் விஸ்தரிக்கப்படுவதற்குமே சோவியத் யூனியன் இந்தக் கடன் உதவியை அளிக்க முன் வந்துள்ளது, என்று டாஸ் செய்தி ஸ்தாபனம் அறிவித்தது.

இந்தக் கடன் உதவி ஒப்பந்தத்தின் ஷரத்துக்கள், சோவியத் யூனியன் ஏற்கனவே இந்தியாவிற்கு உதவிய கடன்களின் ஒப்பந்தங்களின் ஷரத்துகளைப் போன்றவையே.

சோவியத் அரசாங்க மந்திரி சபையின் அயல் நாட்டுப் பொருளாதார உறவுக் கமிட்டியின் தலைவர் செமன் ஸ்காச்கோவும், இந்திய சர்க்காரின் சார்பில் திரு. பி. கே. நேருவும் இந்த ஒப்பந்தத்தில் கையொப்பமிட்டுள்ளனர். 3-வது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் இந்தியாவில் துவக்கப்படப்போகும் பல தொழில் திட்டங்களுக்கு சோவியத் தொழில்நுட்ப உதவியை இந்த ஒப்பந்தம உத்தரவாதம் செய்கிறது என்றும் டாஸ் கூறியது.

### சகல யுத்தங்களையும் தவிர்க்கத் திட்டம்

#### குருஷ்சேவ் யோசனை

மாஸ்கோ, செப். 12—

ஜனதிபதி ஐஸன்ஹோவருடன் தாம் நடத்தப் போகும் பேச்சு வார்த்தைகளில் சர்வதேச நெருக்கடியை தணிக்க ஒரு முதற்கட்டமாக ஒரு யோசனையை முன்வைப்பார் என்று தெரிகிறது. ராஜ்ய எல்லைகளையோ, ராஜ்யங்கள் சமூக அமைப்புகளையோ யுத்த மூலம் மாற்றக் கூடாது என்று உலக முழுவதும் அங்கீகரிக்க வேண்டும் என்பதே இந்த யோசனை. இதை குருஷ்சேவ் ஒரு நிருபர் கூட்டத்தில் வெளியிட்டதாக ஜப்பான்நாட்டு முன்னுள் மந்திரி டாகியோ மிகி கூறினர்.

### பி. சோ. தலைவர் ராஜினமா

பாட்னு, செப் 13—

பீகார் சட்டசபை பிரஜா சோஷலிஸ்ட் கட்சித் தலைவர் எம். பி சின்ஹா பிரஜா சோஷலிஸ்ட் கட்சியிலிருந்து ராஜினமா செய்துவிட்டார். உடல் நலமின்மையே ராஜினமாவுக்குக் காரணம் என்று அவர் கூறுகிறர்.

## முதலில் தலையிட்டார்கள்; பிறகு அதற்கான காரணங்களை தேடினர்கள்!

### கேரளத்தில் ஜனதிபதி ஆட்சி ஏற்பட்டதுபற்றி இ.எம்.எஸ்.

#### ஹைதராபாத்தில் மாபெரும் வரவேற்பு

ஹைதராபாத் செப் 13—

கடந்த 2 நாட்களாக ஆந்திரப் பிரதேசத்தில் சுற்றுப்பிரயாணம் செய்துவரும் தோழர் இ. எம் எஸ் நம்பூதிரிபாட்டுக்கு இன்று ஹைதராபாத்தில் மகத்தான வரவேற்பளிக்கப்பட்டது.

இங்கு நடைபெற்ற மாபெரும் பொதுக்கூட்டத்தில் அவர் பேசுகையில்: "கேரளத்தில் கம்யூனிஸ்ட் மந்திரி சபையிடமிருந்து ஆட்சி நிர்வாகத்தை மத்திய சர்க்கார் மேற்கொள்ளும் ஜனதிபதியின் பிரகடனம், அத்தகைய காரியத்திற்குக் காரணம் ஒன்றும் கூருதது முக்கியத்துவம் வாய்ந்த விஷயமாகும். அரசியல் சட்டத்திலுள்ள ஷரத்தின் வாசகத்தை அப்படியே திருப்பிக் கூறியதே தவிர, ஜனதிபதியின் பிரகடனம் கேரள நிலைமையைப் பற்றி எத்தகைய மதிப்பீடும் தரவில்லை" என்று கூறினர்.

#### காரணமேயில்லை

"ஆட்சிப் பொறுப்பை மத்திய சர்க்கார் மேற்கொள்வதற்கு எத்தகைய காரணமும் அப்பொழுது இல்லாததாலேயே இவ்வாறு செய்யப்பட்டது. பிறகு, கவர்னரின் ரிபோர்ட்டின் சுருக்கத்தில் இதற்கான காரணம் கொடுக்க முயற்சிக்கப்பட்டது" என்று இ. எம். எஸ். கூறினர்.

ஜனதிபதியின் பிரகடனம் ஜூலை 31-ல் வெளியிடப்பட்டது. ஆனல் அதற்கான காரணங்கள் வெளியிடப்பட்டதோ ஆகஸ்ட் 15-ல்!

கவர்னரின்ரிப்போர்ட்டும்கூட கேரளப் பிரதேசக் காங்கிரசின் குற்றச்சாட்டுகள் "பெரிய அளவுக்கு உண்மையானவையே" என்றுமட்டுமே கூறியது. இதற்கு அர்த்தம் அந்தக் குற்றச்சாட்டுகள் பகிரங்கமாக நிரூபணம் செய்ய முடியாது என்பதே. இவற்றில் எந்தக் குற்றச்சாட்டைப் பற்றியும் கேரள கவர்னர் எப்பொழுதும் என்னிடத்தில் கூறியது கிடையாது என்றும் நம்பூதிரிபாட் கூறினர்.

'கம்யூனிஸ்ட் மந்திரிசபை அகற்றப்பட்ட பின்னரும்கூட, கம்யூனிஸ்ட் சர்க்காரைப் பற்றிய பல விஷயங்களைப் பற்றிப் பிரதம மந்திரி நேரு வித்தியாசமான அறிக்கைகளை வெளியிட்டுள்ளார். இதற்கு, கம்யூனிஸ்ட் மந்திரி சபையை அகற்றுவதற்கு சரியானதும், செல்லத்தக்கதுமான காரணம் இல்லாததேயாகும். இந்த மந்திரி சபை கடைசி நாள்வரையிலும் கூட, ராஜ்ய சட்டசபையில் மெஜாரிடி ஆதரவைப் பெற்றிருந்தது" என்று இ. எம். எஸ். மேலும் கூறினர்.

முதலில் முடிவெடுத்துவிட்டுப் பிறகு அதற்கான காரணங்களைத் தேடினர்கள் என்றுதான் கூற வேண்டும் என்ருர் இ எம் எஸ்.

#### தலையீட்டுக்குக் காரணம்

மத்திய சர்க்காரின் நடவடிக்கைக்குத் தன்னுடைய விளக்கத்தைக் கூறுகையில், "இதர ராஜ்யங்களில் காங்கிரஸ் சர்க்கார்கள் வாயால் என்ன கூறிவந்தார்களோ, அவற்றை அமுல்நடத்துவதற்குக் கம்யூனிஸ்ட் மந்திரி சபை கேரளத்தில் முயற்சித்தது. 5 வருடங்கள் பூராவும் பதவியில் நீடிப்பதற்கு கம்யூனிஸ்ட் மந்திரி சபை அனுமதிக்கப்பட்டு, கேரள சர்க்கார் எவ்விதம் செயல்பட்டது என்பதை மக்களும் தெரிந்து கொண்டார்களென்றல், ஒருக்கால் இதர ராஜ்யங்களும் காங்கிரசின் ஏகபோக ஆதிக்கத்திற்கு எதிராக ஓட்டளிக்கக்கூடும்", என்று இ. எம். எஸ் கூறினர்.

ராஜ்யங்களில காங்கிரசைத் தவிர இதர எந்தக் கட்சியை மெஜாரிட்டியாகத் தேர்ந்தெடுத்தாலும், என்ன விளைவுகள் ஏற்படும் என்று மக்களுக்கு எச்சரிக்கை செய்வதாகத்தான் இந்த மத்தியத் தலையீடு இருந்துள்ளது, என்று நம்பூதிரிப்பாட் விளக்கினர்.

#### அறைகூவல்

ஜனநாயகம் பாதுகாக்கப்பட வேண்டுமென்றல் கேரள சம்பவத்தின் முழு முக்யத்துவத்தையும் உணருமபடி நாட்டிலுள்ள எல்லா ஜனநாயகவாதிகளுக்கும் இ. எம். எஸ். கடைசியாக அறைகூவல் விடுத்தார்.

### இ.எம்.எஸ்.ஸுக்கு கனகாபிஷேகம்

விஜயவாடா, செப். 12—

இங்கு விஜயம் செய்துள்ள கேரள முன்னுள்முதலமைச்சர் இ. எம். எஸ். நம்பூதிரிப்பாடுக்கு குடிவாடாவிலிருந்து வந்த ஒரு பிரமுகர் (பணத்தால்) கனகாபிஷேகம் செய்து கவுரவித்தார். தங்கச்செயின் மோதிரம், தங்க வளைகள், ரிஸ்ட் வாச் முதலிய பல பொருள்கள் நன்கொடையாக அளிக்கப்பட்டன. கூட்டம் நடைபெற்ற இடத்திற்கு நம்பூதிரிபாட் சௌக என்று நாமகரணம் செய்யப்பட்டது.



### சீன-இந்திய எல்லை தகராறு

#### பேச்சுவார்த்தை மூலம் தீர்வு காணவேண்டும்

#### சீன பார்லிமெண்டு கமிட்டி முடிவு

பீகிங், செப். 13—

சீன பார்லிமெண்டின் நிர்வாக கமிட்டியில் இந்திய-சீன எல்லை தகராறு பற்றிய 3 நாள விவாதம இன்று முடிந்தது.

சிநேகபாவமான பேச்சு வார்த்தைமூலம் இத்தகராறைத் தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று ஒரு தீர்மானத்தை அக்கமிட்டி நிறைவேற்றியது.

# ஜனசக்தி

சென்னை 14-9-1959


## உடனடியாக நிவாரணம் அவசியம்

ராமநாதபுரம் ஜில்லாவின் கீழ்ப்பகுதியில் பல கிராமங்களில் பஞ்ச நிலைமை ஏற்பட்டிருக்கிறது. குடிதண்ணீர் இல்லாமல் மக்கள் கஷ்டப்படுகிறார்கள். சரியான தீவனம் இன்றிக் கால்நடைகள் இறந்து வருகின்றன. ஆயிரக்கணக்கான கிராம மக்கள் பஞ்சம் பிழைப்பதற்காக வெளி ஜில்லாக்களுக்குக் குடிபெயர்ந்து சென்றபடி இருக்கிறார்கள்.

இன்று இந்தப்பகுதியில் மக்களுக்கு சர்க்கார் எவ்வித நிவாரணமும் அளிக்கவில்லை. அளிப்பதற்கான திட்டம் எதுவும் இருப்பதாகத் தெரியவில்லை. ஜில்லா நிலைபற்றி கம்யூனிஸ்ட் கட்சியின் ஜில்லாக் கவுன்சில் விவாதித்து சில முடிவுகளை எடுத்துள்ளது. இந்த முடிவுகள் நேற்று முன் தினம் 'ஜனசக்தி' யில் வெளி வந்துள்ளன.

கம்யூனிஸ்ட் கட்சி உறுப்பினர்கள் இந்தப் பகுதிகளில் கால் நடையாகச் சென்று யதார்த்த நிலைமைகளை அறிந்து வருகிறார்கள். நிலைமை மேலும் மோசமாகி விட்டது என்ற தகவலே அவர்களிடமிருந்து கிடைத்து வருகிறது.

கம்யூனிஸ்ட் கட்சியின் ஜில்லாக் கவுன்சில் நிலைமைகளைப் பற்றிப் பரிசீலனை செய்து சில முக்கியமான கோரிக்கைகளை முன் வைத்துள்ளது.

படி அரிசி 12 அணுவுக்குக் கொடுக்க வேண்டும்; பெரும் நிலப் பிரபுக்கள் மில் சொந்தக் காரர்களிடம் குவிந்து கிடக்கும் தானியங்களைப் பறிமுதல் செய்யவேண்டும்; கள்ள மார்க்கெட் காரர்கள் மீது கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டும்; உணவு வினியோகத்தைக் கண்காணிக்க எல்லா மட்டங்களிலும் கட்சிப் பாகுபாடு இன்றி உணவு ஆலோசனைக் கமிட்டிகள் நிறுவப்படவேண்டும்; பஞ்சப் பிரதேசங்களில் உடனடி நிவாரண வேலைகள் செய்யப்பட வேண்டும்; கடன்கள் வரி பாக்கிகளை வசூலிப்பதை நிறுத்தி வைக்க வேண்டும்; சர்க்கார் கடன் உதவி தாராளமாகச் செய்தல் வேண்டும்; பஞ்சத்தால்பாதிக்கப்பட்ட மக்களுக்கு உடனே கண்மாய் கால்வாய் மராமத்து வேலைகளைக் கொடுக்க வேண்டும் என்று பல கோரிக்கைகள் முன் வைக்கப்பட்டுள்ளன.

இந்தக் கோரிக்கைகள் சர்வ நியாயமானவை மிகச் சாதாரணமானவை. நாகரிகமுள்ள எந்த சமுதாயஅமைப்பிலும் பொறுப்புள்ள எந்த சர்க்காரும் இந்தக் கோரிக்கைகளை வழங்கியே திரும்.

பஞ்ச நிலைமை இருப்பதை சர்க்காரால் மறுக்க முடியாது. ஆனால் நிவாரண வேலைகள் எதுவும் செய்யப்படாமலிருப்பது மன்னிக்க முடியாத குற்றம். மக்கள் உயிருடன் விளையாடலாமா? பட்டினியுடன் மல்லாடிக் கொண்டிருக்கும் மக்களை அசட்டை செய்யலாமா? ஏற்கனவே வெள்ளம், புயல் என்று இயற்கையின் சீற்றத்தால் அவதிக்குள்ளாகியுள்ள மக்களுக்கு இன்று பஞ்சத்தின் மூலம் ஏற்பட்டுள்ள கஷ்டம் வர்ணனைக் கடங்காது.

இது ஒரு கட்சிப் பிரச்சினை அல்ல. தேர்தலில் ஸ்தானங்களைப் பெறும் விஷயமல்ல ஆயிரக் கணக்கான மக்களின் ஜீவ-மரணப் பிரச்சினை.

ராமநாதபுரம் மக்களின் பஞ்ச நிவாரண விஷயத்திற்கு சர்க்கார் முதலிடம் கொடுக்க வேண்டும். சர்க்கார் உதாசீனமாக இருக்கிறது.

"பஞ்சத்தும் நோய்களிலும்
பாரதர் புழுக்கள் போலத்
துஞ்சத் தம்கண்ணுற்கண்டும்-கினியே
சோம்பிக் கிடப்பாரடி"

என்று பாரதியார் பாடிய நிலையில் காங்கிரஸ் சர்க்கார் இருக்கிறது.

இந்த நிலையை இனி ஒரு விநாடி கூட அனுமதிக்க முடியாது. ராமநாதபுரம் மக்களுக்கு ஆதரவாக, உடனடியாகப் பஞ்ச நிவாரணம் அளிக்கப் படவேண்டும் என்று கோரிப் பொதுஜனக் கிளர்ச்சி பொங்குமாங் கடலென எழுதல் வேண்டும். தமிழகத்து மக்கள் ராமநாதபுரத்திலுள்ள தமது சகோதர மக்களுக்கு எல்லா வழிகளிலும் உதவியளிப்பார்கள்; உறுதுணையாக நிற்பார்கள் என்பதில் ஐயமில்லை.

## பாரதியின் தனிச் சிறப்பு

[ஜீவா]

[தமிழகக் கலைஞர்களின் சார்பாக நடிகர் திலகம் சிவாஜி கணேசன் சென்னையில் சிறப்பான பாரதி விழாவிற்கு ஏற்பாடு செய்திருந்தார். அவ்விழாவில் கலந்து கொண்ட தோழர் ஜீவா அவர்கள் "பாரதியின் தனிச் சிறப்பு" என்பது பற்றி நீண்டதோர் சொற்பொழிவாற்றினர். அச் சொற்பொழிவில் பல புதுமைக் கருத்துக்களை, புதிய கருத்துக்களை வழங்கினர். அவரது சொற்பொழிவின் சாரத்தை சுருங்கத் தருகிறோம்.]

"பாரதி, விடுதலைக் கவி தேசிய கவி, சீர்திருத்தக் கவி என்ற நிலைமை இந்தியா விடுதலையடைந்தோடு, காலகர்ணமாகி விட்டது. அவருடைய பக்திப் பாடல்களுக்கு, வேதாந்தப் பாடல்களுக்கு, குயில் பாட்டு, பாஞ்சாலி சபதம் போன்ற காப்பியங்களுக்குத்தான் நிலையான மதிப்பு இருக்க முடியும் என்று பாரதி விழா மேடையில் சமீப காலமாக சிலர் பேசத் தொடங்கியிருக்கிறார்கள். ஆனால் உண்மை என்ன? பாரதியின் பெயரால் இவர்கள் சுதந்திரம்பற்றிய தங்களுடைய கொச்சையான கருத்துக்களைக் கூறுகிறார்கள் என்பதுதான்".

### என்றும் நிலைத்து நிற்கும்

"பாரதியின் தேசிய விடுதலைப் பாடல்கள் அவருடைய காவியங்கள் போன்று இன்று மட்டுமல்ல, என்றும் நிலைத்து நிற்கத் தகுதி யுடையவை" என்று நேற்று நடைபெற்ற பாரதி விழாக் கூட்டத்தில் பேசுகையில் தோழர் ஜீவா குறிப்பிட்டார்.

தேனாம்பேட்டையில் நடந்த இவ்விழாவினை நடிகர் திலகம் சிவாஜி கணேசன் கலைஞர்களின் சார்பாக நடத்தினர். விழாவினை தமிழரசுக் கழகத் தலைவர் திரு. ம. பொ. சிவஞானம் ஆரம்பித்து வைத்தார். நிதி அமைச்சர் சி. சுப்பிரமணியம் தலைமை வகித்தார். கலைஞர் டி. கே. ஷண்முகம் 'ஜெய பேரிகை கொட்டடா' என்ற பாரதியின் பாடலை உள்ளம் உருக, உடல் சிலிர்க்க, உணர்ச்சியோடு பாட விழா ஆரம்பமாகியது.

திரு. சிவாஜி கணேசன் அனைவரையும் வரவேற்றுப் பேசினர். விழாவில் எல்லாத் திரைப்படக் கலைஞர்களும் கலந்துகொண்டார்கள்.

### தனிச் சிறப்பு

இவ்விழாவில் பேசிய தோழர் ஜீவா அவர்கள் பாரதியின் தனிச் சிறப்பு என்ன என்ற கேள்வியை மக்கள் முன்னிறுத்தி, அதற்கு விடையளித்து தொடர்ந்து பேசுகையில் கூறியதாவது: நிகரற்ற கலைஞன் கம்பன், உண்மை உரைத்த ஒப்பில்லா மேதை வள்ளுவப் பெருந்தகை, நெஞ்சை யள்ளும் சிலம்பினைத் தந்த இணையற்ற வள்ளல் இளங்கோ இவர்கள் வரிசையை எடுத்துக்கொண்டாலும், அவர்களோடு பாரதி யும் நிற்கிறான். வால்மீகி, துளசிதாசர், நாயன்மார்கள், நம்மாழ்வார், வள்ளலார் போன்ற அருட் பெரும் புலவர்களின் வரிசையைப் பார்த்தாலும் அவ்வரிசையிலும் பாரதியைப் பார்க்கலாம். அருட் புலமையை வைத்து, கவிதா விலாசத்தை வைத்து, கவித் திறமையை வைத்து மேற்கூறியவர்களோடு நிறுத்திப் பார்த்தால் பாரதியும் பத்தோடு பதினொன்றாகத் தான் தெரிவான்.

ஆனால் இவர்களுக்கெல்லாம் இல்லாத தனிச் சிறப்பு பாரதியிடம் உண்டா? உண்டு என்று நான் அழுத்தந் திருத்தமாகக் கூறுவேன். ஏனெனில் பாரதி ஒரு புதிய யுகத்தைக் கண்டான்; புதிய சமுதாயத்தைக் கண்டான்; புதிய ஜாதியை, இனத்தைக் கண்டான்; புதிய தமிழகத்தைச் சமைத்தான். பாரதி ஒருவன் தான் நாட்டைக் கடவுளாகக் கண்டான்; பாடினன். அதற்கு முன்னால் வாழ்ந்த கவிஞர்களெல்லாம் நாட்டைக் கடவுளாகப் பாடிய செய்தியைப் பார்க்க முடியாது. எனவே பழமைய கண்ணோட்டமுள்ள பழங்கால மனிதர்களால் பாரதியை முழுமையாகப் பார்க்கமுடியாது; பாரதியின் தேசபக்த சுதந்திரக் கவிதைகள் என்றைக்குமே நிலைத்திருக்கும் தன்மை வாய்ந்தன வென்பதை அவர்களால் உணர முடியாது.

### மக்கள் பக்கம்

உதாரணத்திற்கு பாரதியின் பாஞ்சாலி சபதத்தை எடுத்துக் கொள்வோம். பாரதிக்குமுன்னால் நல்லாப் பிள்ளையின் பாரதம், பெருந்தேவனர் பாரதம், வில்லி பாரதம் போன்ற நூற்களும் இருக்கத்தான் செய்தன. வியாசர் பாரதத்தில் கடவுளர்களைப் பற்றி, மேல்லோகம், கீழ்லோகங்களைப் பற்றி யெல்லாம சொல்லியிருக்கிறார். ஒரு மனிதன் மூளையில் அதிக படசம் எவ்வளவு சரக்கு இருக்கும் என்பதைவில்லிபுத்தூரார் தமது பாரதத்தில் காட்டியிருக்கிறார். ஆனால் அவர்களெல்லாம் கூறாத ஒரு அரும் கருத்தினை பாரதி தனது பாஞ்சாலி சபதத்தில் கூறுவதைப் பார்க்கிறோம்.

பாஞ்சாலி சபதத்தில் ஒரு காட்சி! சூதாட்ட மனையில் தர்மன் உட்கார்ந்திருக்கிறான். எதிரே சூதில் வல்ல சகுனி உட்கார்ந்திருக்கிறான். தருமன் சாதாரண தருமனல்ல. ஆயிரம் நீதிகள் அறிந்த-அல்ல-உணர்ந்த தருமன் தேசத்தையே இழக்கிறான். இதனை பாரதி எங்ஙனம் எடுத்துக் கூறுகிறான் தெரியுமா?

"கோயிற் பூசை
செய்வோர்-சிலையைக்
கொண்டு விற்றல் போலும்
வாயில் காத்துநிற்போன்வீட்டை
வைத் திழத்தல் போலும்
ஆயிரங்களான-நீதி
யவை உணர்ந்த தருமன்
தேயம் வைத்திழந்தான்;-சிச்சி
சிறியர் செய்கை செய்தான்"

என்று கோபாவேசத்தோடு பாரதி தருமனைச் சாடுகிறான். ஆயிரம் நீதிகளை யுணர்ந்த தருமன் சீச்சி! சிறியர் செய்கை செய்தான் என்று கூறுகிறான். இங்கே ஜனநாயக யுகத்தின் மக்கள் பக்கத்தில் நின்று பாரதி கூறுவதைப் பார்க்கிறோம். தேசம் சூதாட்டத்தில் வைத்து இழக்கக் கூடிய அம்மானைக்காய் அல்ல என்பதை உணர்த்துகிறான். அதனால் தான் தருமனை சீச்சி சிறியர் செய்கை செய்தான் என்று கூறுகிறான். இதுதான் பாரதியினுடைய தனிச் சிறப்பாகும். மேலும் பாஞ்சாலி சபதத்தில் நாட்டுக்கும் மன்னனுக்கும் உள்ள உறவு பற்றியும், பெண்களைப் பற்றியும் கூறுகிறான். அங்கெல்லாம் பாரதி மக்கள் பக்கத்திலேயே நின்று, ஜனநாயகக் கருத்துக்களைப் புதுமைக் கருத்துக்களைக் கூறுவதைப் பார்க்கிறோம்.

### இங்கேயே சுவர்க்கம்

பாரதி மனித வர்க்கத்திற்கு சொர்க்கத்தை இங்கேயேபடைத்தான். "தெய்வம் இகழேல்" என்றார் ஔவை பிராட்டியார். ஆனால் பாரதி தெய்வத்தைப் புகழ் என்று கூறவில்லை. "தெய்வம் நீ என்றுணர்" என்று கூறுகிறான். அப்படிப்பட்ட பாரதியின் விழாவில் அவனது சுதந்திரக் கருத்துக்களையே கொச்சைப் படுத்திக் கூறும் நிலைமை ஏற்பட்டுவிட்டது.

"எங்கும் சுதந்திரம் என்பதே பேச்சு" என்று மேடையிலேதி இரண்டு மூன்று பேர் பேசிவிட்டால் மட்டும் சுதந்திரம் வந்ததாகிவிடாது. இமயம் முதல் குமரி வரை வாழ்கின்ற எல்லா மக்களும் சுதந்திரம் வந்தாய்விட்டது என்று சொல்லவேண்டும். சுதந்திரத்தின் அவசியத்தை எவ்வளவுக்கெவ்வளவு உணர்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவுதான் நமக்கு சுதந்திரம் வந்திருப்பதாக பொருள்" என்று கூறினர்.

அவர் மேலும் கூறுகையில், "பாரதி தமிழ் இலக்கியத்திற்கு இரண்டு உயர்ந்த கருத்தாழம் பொதிந்த தமிழ்ச் சொற்களை வழங்கியிருக்கிறான். பழமையின் சிறப்பையும், நிகழ் காலத்தையும், எதிர்காலச் சிறப்பையும் உணர்ந்த பாரதி ஐரோப்பாவில் கழற்றியடித்த புரட்சிகளை பிரஞ்சுப் புரட்சியை, தொழிற்புரட்சியை ரைஷ்யப் புரட்சியை, அக்டோபர் புரட்சியை, தொழிலாளி வர்க்கத்தின் விழிப்புணர்ச்சியை பார்த்தான். பார்த்து, சோஷலிஸக் காற்று இந்தியாவிலும் வீசும் என்று கூறினன். அப்பொழுது ஆங்கிலத்தில் (Revolution) என்ற சொல்லிற்கு சரியான, பொருத்தமான தமிழ் சொல் ஒன்றை, "புரட்சி" என்ற சொல்லை தமிழ் இலக்கியத்திற்கே வழங்கினன். அதற்கு முன்னால் அப்படிப்பட்ட சொல்லே தமிழில் வழங்கியதில்லை. அதேபோன்று (Communism) என்ற சொல்லிற்குப் "பொதுவுடைமை" என்ற சொல்லையும் வழங்கியவன் பாரதிதான்" என்ற பலத்த கர கோஷத்திற்கிடையே கூறினர்.

## மதுரை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சி விவசாய சங்கத்தலைவர்கள் பாதயாத்திரை

### ஊரெல்லாம் உற்சாகமான வரவேற்பு

### நிலவுடமைக்கு உச்சவரம்பு கட்டவேண்டுமென்ற கோரிக்கைக்கு மக்களின் அமோக ஆதரவு

உத்தமபாளையம், செப். 11—

மதுரை ஜில்லா கம்யூனிஸ்ட் தலைவர் ஏ. பாலசுப்ரமணியம் தலைமையில் தோழர்கள் வி. மதனகோபால், கே. பி. ஜானகியம்மாள், ஏ. பி. பழனிச்சாமி, ஆர். ராமராஜ், ஏ. அப்துல் வஹாப், பீ. அப்துல் காதர் ஆகிய கம்யூனிஸ்ட் தலைவர்களும் விவசாய சங்கத் தலைவர்களும் மதுரை ஜில்லாவில் 20 நாட்களில் சுமார் 400 மைல்கள் நடந்து, இந்த ஆண்டு இறுதிக்குள் நிலவுடைமைக்கு உச்சவரம்பு கட்ட வேண்டும் என்ற விவசாயிகளின் ஜீவனுன கோரிக்கையை வலியுறுத்தி, மதுரை ஜில்லாவின் தென் கோடி ஊராகிய கூடலூரில் 1-9-59 காலை 6 மணிக்கு பாதயாத்திரை ஆரம்பித்தார்கள்.

### கம்பம் நோக்கி

பாதயாத்திரைக் குழுவினர் கம்பம் நகரை நோக்கி நடந்தனர். விவசாயிகளும் தலைவர்களைப் பிரிந்து செல்ல மனம் இல்லாமல் தொடர்ந்து நடந்தனர். உணர்ச்சி வெள்ளம் பெருக்கெடுத்து ஓடியது. கூடலூர் மக்கள் தலைவர்களுக்கு மலர் மாலைகள் அணிவித்து வாழ்த்தியனுப்பினர். செங்கொடிகள் கெம்பீரமாக முன் செல்ல, "1959க்குள் உச்ச வரம்பு கட்டுக! உபரி நிலங்களை நிலமில்லாத விவசாயிகளுக்குப் பங்கிட்டுக் கொடு! தரிசு நிலங்களை நிலமில்லாத விவசாயிகளுக்கு ஜாரி செய்! ஆண்டு வருமானம் 4800 ரூபாய் அளவில் நிலவுடைமைககு வரம்பு கட்டு!" என்ற முழக்கங்கள் வானதிர ஒலித்தன.

### தொழில்கள் வளர உழுவன் செழிக்க வேண்டும்

கூடலூரில் ஆக. 31ல் கம்யூனிஸ்ட் தலைவர் தோழர் வி. சொக்கலிங்கம் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. ஏ. பாலசுப்ரமணியமும் ஜானகியம்மாளும் பேசினர்கள்.

கம்பம் பொதுக்கூட்டத்தில் தோழர் எம். தாவூத தலைமை வகிகக, ஆர். ராமராஜும், ஏ. பி. பழனிசசாமியும், மதனகோபாலும் பேசினர்கள்.

நாடு முன்னேற நிலச்சீர்திருத்தமே முதற்படியென்றும், கிராம மக்கள் கையில் செல்வம் சேர்ந்தால்தான் வர்த்தகம் வளரும், தொழில்கள் செழிக்கும், வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியும் என்பதை விளக்கினர்கள்.

### 12 வருடமாகியும்

இந்த சீர்திருத்தத்தை அடிப்படையாக வைத்துத்தான் சென்ற காலத்தில் விடுதலைப் போராட்டம் நடந்தது என்றும், வாக்குறுதி தந்த காங்கிரஸ் 12 வருடமாக சகல அதிகாரத்துடன் ஆட்சியிலிருந்தும் கூட எந்த மாகாணத்திலும் நிலச்சீர் திருத்தம் செய்யவில்லை யென்றும் பேசினர்கள்.

### கேரளத்தில் மட்டுமே

ஆனால் கம்யூனிஸ்ட் கட்சியின் தலைமையில் இருந்த கேரள சர்க்கார் ஒன்றினால்தான் முழுமையான நிலச்சட்டம் கொண்டு வந்து உழுபவனுக்கு நிலம் கிடைக்க உத்தரவாதம் அளிக்கப்பட்டது என்றும், நிலமில்லாத விவசாயிகளுக்கு தரிசு நிலம் பிரித்துக்கொடுக்கப்பட்டது என்றும பேசினர்கள்.

### போராடத் தயாராகுக!

இந்த நல்ல சட்டத்தைச் செய்த சர்க்காரைத்தான், கலகத்தைக் கிளப்பிவிட்டு, மத்திய சர்க்கார் கலைத்துவிட்டது என்றும், நிலச் சீர்திருத்தச் சட்டம் கொண்டுவரச் செய்யும் சக்தி விவசாயிகளிடமே இருக்கிறதென்றும், அனைவரும் ஒன்று சேர்ந்து சகல ஊர்களிலும் விவசாய சங்கங்கள் அமைத்து, அவற்றில் ஒன்று திரண்டு போராட முன்வர வேண்டுமென்றும், இதை விவசாயிகள் மத்தியில் எடுத்துக்கூறி போராட்டத்துக்கு தயார் செய்யவே இந்த பாத யாத்திரை என்றும் பேசினர்கள்.

தலைவர்களுக்கு கம்பத்தில் தேனீர் விருந்து நடைபெற்றது.

பாத யாத்திரை தலைவர்கள் புதுப்பட்டியை நோக்கி நடந்தனா. புதுப்பட்டி பஞ்சாயத்து போர்டு தலைவரும், பெரியகுளம் தாலுகா விவசாய சங்கத் தலைவருமான தோழர் எஸ். வெங்கடசாமியும் விவசாயிகளும் அனைவரையும் வரவேற்று உபசரித்தனர்.

பின்னர் காக்கிலு சிக்கையன் பட்டியில் விவசாயிகளின் மத்தியில் தலைவர்கள் பேசினர்கள்.

### உத்தமபாளையத்தில்

பாத யாத்திரைக் குழுவினர் காலை 11 மணிக்கு உத்தமபாளையத்தை அணுகினர். அவர்களுடன் கம்பம கம்யூனிஸ்ட் கட்சிக் காரியதரிசி என். ராமசாமி தலைமையில் 50 தோழர்கள் புடைசூழ வந்தனர்.

ஊர் கச்சேரி முன் திரளான மக்கள், மாலைகளிட்டு ஆரவாரத்துடன் வரவேற்றனர். பல இடங்களில் தோழர் மதனகோபால் பேசினர் மாலையில் கம்யூனிஸ்ட் தலைவர் பி. உசேன் மீரும் பாத யாத்திரையில் சேர்ந்து கொண்டார்.

### சின்னமனூர் நோக்கி

பின்னர் தலைவர்கள் மாலை 4 மணிக்கு சின்னமனூரை நோக்கி புறப்பட்டனர். மக்கள் தொடர்ந்து வந்து வழியனுப்பினர். மாலை 6 மணிக்கு சின்னமனூரில் தோழர்கள் பி. பாண்டியன், எம். ஆர். பாண்டியன் தலைமையில் வந்த மக்கள் குதூகலத்துடன் தலைவர்களுக்கு மாலை அணிவித்து வரவேற்றனர்.

### போடியிலிருந்தும் ஒரு யாத்திரைக் குழு

போடியிலிருந்து தோழர் ஆர். கே. சென்னையசாமி தலைமையில் பிரசார யாத்திரை செய்து வந்த தோழர்கள் 50 மைல்கள் நடந்து 30 கிராமங்களில் பிரச்சாரம் செய்து கொண்டு 6-30 மணிக்கு சின்னமனூர் வந்தடைந்தனர். அவர்களுக்கு வரவேற்பளிக்கப் பட்டது.

அன்று தோழர் எம் ஆர். பாண்டியன் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஏ. பாலசுப்பிரமணியமும், வி. மதனகோபாலும் பேசினர்கள்.

### சீலையம்பட்டியில்

சீலையம்பட்டியில் தோழர் உசேன்மீர் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஏ. பி. பழனிச்சாமியும், ஆர். ராமராஜும் பேசினர்கள்.

மறுநாள் செப். 2-ல் பாத யாத்திரைக் குழுவினருடன் கோம்பைத் தோழர்கள் டி. எஸ். சுப்பையாவும், அனந்த நாராயணன் என்ற மணியும், ஜில்லா கவுன்சில் மெம்பர் பி. ராமரும் கலந்து கொண்டனர்.

### வீரபாண்டி, கோட்டூர்

சீலையம்பட்டியில் வரவேற்புகளும் சிற்றுண்டியும் முடித்துக் கொண்டு கோட்டூர் சென்றனர். அங்கு நடந்த கூட்டத்தில் மதனகோபால் பேசினர்.

மத்தியானம் யாத்திரைக் குழுவினர் வீரபாண்டியை அடைந்தனர். பஞ்சாயத்து தலைவர் இராஜமாணிக்கம் வரவேற்று உபசரித்தார். அவர் தலைமையில் மாலையில் நடைபெற்ற பொதுக் கூட்டத்தில் ஏ. பாலசுப்பிரமணியம், மதனகோபால், ஜானகியம்மாள் ஆகியோர் பேசினர்.

### முத்துத் தேவன்பட்டி, பழனி செட்டிபட்டி

மீண்டும் 5-30 மணிக்கு தொடர்ந்து முத்துத்தேவன்பட்டிக்கும், பழனி செட்டி பட்டிக்கும் சென்று, சிறு சிறு கூட்டங்களில் வரவேற்புகளைப் பெற்று, பேசிவிட்டு மாலை 6-30 மணிக்கு தேனிவந்தடைந்தனர்.

### தேனியில்

தேனி ஆற்றுப்பாலத்தின் அருகில் ஏராளமான தொழிலாளர்களும் விவசாயிகளும் திரண்டு வந்து, பாண்டு வாத்தியங்கள் முழங்க, அதிர்வேட்டுகள் ஒலிக்க ஆரவாரத்துடன் மாலையிட்டு தலைவர்களை வரவேற்றனர். செங்கொடி ஏந்தி கோஷங்கள் முழக்கிக் கொண்டு வந்த பெண் தொழிலாளர்களின் உற்சாகம் குறிப்பிடத்தக்கதாகும். இரவில் பகவதியம்மன் கோவில் முன்னிலையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தோழர்கள் கே பி. ஜானகியம்மாள், பாலசுப்ரமணி, ஆர். ராமராஜ், மதனகோபால் ஆகியோர் பாதயாத்திரையின் நோக்கம் பற்றியும் இன்றைய அரசியல் நிலைமை பற்றியும் பேசினர்கள். க. நி.

## திருச்சியில் பொறியியல் கல்லூரி

சென்னை, செப். 12—

திருச்சியில் ஒரு பொறியியல் கல்லூரி ஏற்படுத்துவதுபற்றிய திட்டம் ஆலோசனையில் இருந்து வருவதாக இன்று சட்டசபையில நிதி மந்திரி திரு. சுப்பிரமணியம் தெரிவித்தார்.

சேஷசாயி கம்பெனி நிர்வாகம் இந்தக் கல்லூரிக்காக நிதி உதவ முன் வந்திருப்பதாகவும், திட்டமும் சமர்ப்பித்திருப்பதாகவும் மந்திரி கூறினர்.

## மொரார்ஜி தேசாய் ஒரு வகுப்புவாதி

### மந்திரி பதவி வகிக்க லாய்க்கா?

புதுடில்லி, செப். 10—

1930ம் வருடத்தில் மொரார்ஜி தேசாய் பம்பாய் ராஜ்யத்தில் சப் டிவிஷனல் மாஜிஸ்ட்ரேட்டாக வேலை பார்த்தார். அக்காலத்தில் இந்து முஸ்லீம் சண்டை வந்துவிட்டது. அது சம்பந்தமான வழக்குகள் கோர்ட்டுக்கு வந்தன என்றும், நீதிபதியாகிய மொரார்ஜி தனது கடமையை நடுநிலைமையிலிருந்து செய்யவில்லை என்றும் எனவே கடமை தவறிய. இவரை பற்றி பம்பாய் சர்க்காருக்குப் புகார்கள் கிடைத்தனவென்றும், அதன்படி சர்க்கார் ஒரு ரகசிய தாக்கீது அனுப்பினர்களாம் மொரார்ஜி தேசாயின் உத்தியோக ஒழுங்கு, நம்பர் 3307 இ-28, ரெவினியூ டிபார்ட்மெண்ட், பம்பாய் கோட்டை 1930 ஏப். 10 என்று அந்த தாக்கீதில் கண்டிருக்கிறது.

அதில், "இரு தரப்பு ஜனங்களிடையேயும் பகை முற்றி நிலைமை கஷ்டமாகியுள்ள வேளையில் சப்டிவிஷனல்மாஜிஸ்டிரேட் என்ற முறையில் தனது கடமையை மொரார்ஜி தேசாய் செய்யத் தவறினர். இதற்கு அவரது வகுப்புவாதமே காரணமாகும். இது டிஸ்மிஸ் செய்யப்படத்தக்க கடுமையான குற்றமாகக் கருதப்படுகிறது. எனினும் 10 வருடமாக அரசாங்கத்துக்கு நன்முக சேவை செய்திருக்கிற காரணத்தினுல், இதுவரை டிஸ்மிஸ் செய்யாமல் இரண்டாவது கிரேடு டிபுடி கலெக்டராக வேலை பார்க்கும்படி கீழ் பதவிக்கு அனுப்பப்படுகிறார்" என்று அந்த இரகசியத் தாக்கீதில் கண்டிருக்கிறது.

### போட்டோ காப்பி

அந்த தாக்கீதை அப்படியே புகைப்படமெடுத்து இந்த வருடம் ஆகஸ்டு 15-ல் மாதா என்ற பத்திரிகை வெளியிட்டிருக்கிறது.

இப்படிப்பட்ட ஒரு வகுப்புவாதி, மதச் சார்பற்ற ஒரு அரசாங்கத்தில் மந்திரியாக இருக்க அனுமதிக்கலாமா என்றும் அந்த இரகசிய தாக்கீது பொய்யானது என்றால் அதை மறுத்து மொரார்ஜி ஒரு அறிக்கை விட முன்வருவாரா என்றும் 29-8-59 பிளிட்ஸ் பத்திரிகையில் வாக்ஸ் பாப்புலி என்பவர் ஒரு கடிதம் எழுதியுள்ளார்.

## மன்னத் பத்மனுபன் ஸ்விட்ஜர்லந்து விஜயம்

### கம்யூனிஸ்ட் இயக்கத்தை மக்கள் எதிர்க்கவேண்டுமாம்

திருவனந்தபுரம், செப். 12—

விமோசன சமர சமிதியின் காரணகர்த்தாவாகிய ஸ்ரீமான் மன்னத்துப் பத்மனுபன் ஸ்விட்ஜர்லாந்து தேசத்திற்கு அடுத்த வாரம் பயணமாகிருராம். கேரள மக்களுக்கு அவர் விடுத்துள்ளச் செய்தியில் கம்யூனிஸ்ட்களை வருகிற தேர்தலில் தோற்கடிப்பதோடு, கம்யூனிச இயக்கத்தையே எதிர்த்துப் போராட வேண்டுமென்று கூறியுள்ளாராம். தேர்தல் முடிந்த பிறகும் இதை அவர்கள் நினைவுபடுத்திக் கொள்ளவேண்டுமாம்.

பாவம் மன்னத்து பத்மனுபன் ஹிட்லர் முசோலினியின் சரித்திரத்தை மறந்து விட்டார்போலிருக்கிறது. ஸ்விட்ஜர்லந்து போய்விட்டு வரும் போதாவது சிந்தனைத் தெளிவோடு வருவார் என்று கேரளத்து மக்கள் எதிர்பார்க்கிறார்கள்.

செப்டம்பர் 15-ந் தேதி புறப்படுகிறாராம். அவருடன் மொழி பெயர்ப்பாளர் ஒருவரும் செல்கிறார் என்று கூறப்படுகிறது.

## சென்னையில் ஜப்பான் வர்த்தகக் கோஷ்டி

சென்னை, செப். 13—

இந்தியாவில் தற்போது சுற்றுப் பிரயாணம் செய்யும் ஜப்பான் வர்த்தகக் கோஷ்டி இன்று பிற்பகல் சென்னை வந்து சேர்ந்தது. இங்கே வர்த்தகப் பிரதிநிதிகளுடன் அக்கோஷ்டி பேச்சு வார்த்தை நடத்தும்.

## ஆசிரியருக்குக் கடிதங்கள்

### லேபர் ஆபீசரை மாற்றக் கூடாது

ஐயா,

அருப்புக்கோட்டைக்கு திரு. எஸ். ஆர். நாராயணன் என்ற லேபர் ஆபீசர் வந்திருக்கிறார். சட்டத்திற்குட்பட்டு நடந்து கொள்ள வேண்டுமென்று தொழிலதிபர்களைக் கேட்டுக் கொண்டார். ஆகஸ்டு 15 சுதந்திர தினத்தன்று விடுமுறை விடும்படியும், வேறு ஒரு நாளில் கடை திறக்கும்படியும் தெரிவித்து, வெற்றி கண்டார். உடனே வந்தது கோபம் யாருக்கு? காங்கிரஸ் முதலாளிகளுக்கு! தற்பொழுது சட்டத்தை அமுல் நடத்த விரும்பும் ஆபீசரை மாற்றுவதற்கு முயற்சிகள் நடைபெறுவதாகக் கேள்விப்படுகிறோம். சட்டத்தைப் பாதுகாத்த, அதிகாரியைப் பாதுகாக்க அரசாங்கமும், மேலதிகாரிகளும் முன்வருவார்களா?

இப்படிக்கு,
ஒரு தொழிலாளி,
அருப்புக்கோட்டை.

### இந்திரா அம்மையார் என்ன பதில் கூறுவார்?

ஐயா,

தண்டனை அனுபவிக்கும் கைதிகளின் நெருங்கிய உறவினர்கள் இறந்தாலோ அல்லது வேறு விசேஷ நிகழ்ச்சிகளின் போதோ கைதிகள் பரோலில் விடுதலை செய்யப்படுகிறார்கள். சட்டமும் அனுமதிக்கிறது. அண்மையில் தினகரசாமித் தேவர் என்ற காங்கிரஸ்காரர் கொல்லப்பட்டபோது, ஆயுள் தண்டனை அனுபவிக்கும் அவரது மகன் சங்கரலிங்கம் ஒரு மாத பரோலில் விடுதலை செய்யப்பட்டிருக்கிறார், இது வரவேற்கத் தகுந்ததே. ஆனால் அரசாங்கம் இந்த சலுகைகளை பிற கைதிகளுக்கும் வழங்கவேண்டாமா?

செம்பனூரைச் சேர்ந்த வடிவேல் என்பவரின் தாயார் இயற்கை எய்திய பொழுது அந்த சலுகை அவருக்கு மறுக்கப்பட்டது. தூதைக் கிராமத்தைச் சேர்ந்த ஐயாச்சாமி சேர்வை, கருப்புசாமிசேர்வை ஆகிய இரு சகோதரர்கள் பத்து வருடகாலமாக சிறையிலிருக்கிறார்கள். தங்கள் தாயார் இறந்ததற்கு ஈமச் சடங்கு செய்ய பரோல் மறுக்கப்பட்டுவிட்டது. அந்தத் தாய்க்கு வேறு மகன்கள் இடையாது ஐயாச்சாமியின் மனைவி இறந்ததற்கும் பரோல் மறுக்கப்பட்டுவிட்டது. இங்ஙனம் தங்கள் கட்சிக்காரர்களுக்கு ஒரு நீதியும், மற்றவர்களுக்கு ஒரு நீதியும் வழங்குவதை என்னவென்று அழைப்பது? கேரள அமைச்சரவை தங்கள் கட்சிக்கு சலுகை கொடுத்தது என்று இந்திரா முதல் ராஜாராம்வரை தொண்டை கிழியக் கத்தினர்களே அவர்கள் இதற்கு என்ன பதில் கூறுவார்கள்.

ப. மாணிக்கம்,
கெம்பனூர்.

### மசால்ஜி காவலர்களின் பரிதாப நிலைமை

ஐயா,

சென்னை அரசாங்க இலாகாக்களில் மசால்ஜி உத்தியோகம் என்று ஒருவித உத்தியோகம் இருக்கிறது. இரவு பகல் காவல் வேலை பார்க்கும் காவல்காரர்கள் தான் அந்த மசால்ஜிகள். இவர்கள் மாலை 4 30 மணிக்கு ஆபீஸுக்கு வேலை பார்க்கப் போனால் மறுநாள் பகல் 11 மணிக்கோ 12 மணிக்கோ தான் வீட்டுக்குப் புறப்படவேண்டும் அப்படியானால் தினம் 20 மணிக்குமேல் வேலை! தினம் 8 மணி தான் வேலை நேரம் என்று சட்டம் செய்யும் ஒரு சர்க்காரில் வேலை செய்யக் கூடிய எங்களின் கதி இப்படியிருக்கிறது.

வேலை நிரந்தரமாவது உண்டா? அதுவுமில்லை, அதிகாரி இஷ்டப்பட்டால் எந்தச் சமயத்திலும் வேலையை விட்டு நீக்கலாம். 10 வருட சர்விஸ்காரர்கள் கூட இப்படி நீக்கப்பட்டிருக்கிறார்கள்.

லீவு வசதியாவது உண்டா? அறவே கிடையாது. 20 மணி வேலை நேரமும் லீவு வசதி எதுவுமே இல்லாதிருப்பதும் எங்கள் குடும்ப சுகத்தையே சூனியமாக்கி விடுகிறது. என்னைப் போல் கல்யாணம் காய்ச்சி பண்ணினவர்களின் நிலைமை எப்படி இருக்குமென்று நீங்களே சொல்லுங்கள்! சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கருணையுடன் ஆவன செய்வார்களா?

மசால்ஜி காவலர்கள்,
சென்னை.

### அறிவகம் தெளிவுபடுத்துமா?

ஐயா,

செப்டம்பர் 10-ந் தேதியன்று சென்னை சட்டசபையில் உணவுப் பிரச்சினையின் மீது நடைபெற்ற விவாதத்தில் தி. மு. க. சட்டமன்ற உபதலைவர் திரு. அன்பழகன் பேசுகையில், 'நமது மாகாணத்தில் விளையும் அரிசி வெளி மாகாணங்களுக்குச் செல்வதால்தான் இன்று அரிசிப் பஞ்சம் வந்துவிட்டது' என்று கூறியுள்ளார்.

அதே தினத்தில் தி.மு.க.சட்டமன்ற உறுப்பினர் திரு.எஸ்.எம். அண்ணாமலை பேசுகையில் "நிறைய அரிசிகள் நமக்கு வந்து கொண்டிருக்கின்றன. இப்படி வந்து கொண்டிருந்தும், ஏன உணவு பற்றாக்குறையாக இருக்கிறது. ஆண்டுக்குஆண்டுகேரளாவிற்குச்செல்லும் அரிசிகுறைந்து கொண்டுதான் வருகிறது. ஆனால் ஆந்திராவிலிருந்து வரும் அரிசி அதிகரித்துக் கொண்டே வருகிறது. இப்படி அதிகமாக வந்தும் பஞ்சம் குறைந்தபாடில்லை" என்றார்.

இந்த இரு தி. மு. க. உறுப்பினர்கள் பேசியுள்ளதில் எது தி. மு. க.வின் அதிகார பூர்வமான அபிப்பிராயம்? அறிவகம் தெளிவுபடுத்துமா?

அறிவாசு,
நெல்லை.

## கேரளத்தின் 13வது நூற்றாண்டு நாணயங்கள் புதையலில் கிடைத்தன

திருவனந்தபுரம், செப். 13—

கேரளத்தில் 600 ஆண்டுகளுக்கு முன்பு உபயோகத்திலிருந்த பழைய நாணயங்கள் அடங்கிய 35 பெட்டிகளைக் கேரள சர்க்காரின் புதைபொருள் ஆராய்ச்சி இலாகா கண்டு பிடித்துள்ளது.

அந்த நாணயங்கள் 13வது நூற்றாண்டில் வட மலபாரில் சிரக்கல் ராஜாவால் வெளியிடப்பட்டனவையென்று நம்பப்படுகிறது. (ஐ. பி. ஏ.)

# ஜமீன்தார்களுக்கு தரும் நஷ்டஈட்டை 2 வருடம் ஒத்திவைத்தால் என்ன?

## கோவை நகரசபையின் முயற்சிகளுக்கு உதவுக!

### வி. கே. கோதண்டராமன், என். மருதாசலம் பேச்சு

சென்னை, செப். 11—

சென்னை சர்க்காரின் இவ்வருடத்திய பட்ஜெட்டில் மேலும் சுமார் 4 கோடி ரூபாய் துணைச் செலவு மானியம் வேண்டுமென்று நிதியமைச்சர் கோரியதின் மீது சட்டசபை உறுப்பினர்கள் கருத்துரை வழங்கினர்கள்.

கம்யூனிஸ்ட் உறுப்பினர் தோழர் வி. கே. கோதண்டராமன் பேசுகையில் கூறியதாவது:

"தொழிலாளர்களுக்கு வீடு கட்டிக் கொடுத்து திரு. வி. க. நகர் என்றும் சர்மா நகர் என்றும் காலனிகள் ஏற்படுத்தியுள்ளதாக பெருமையாகப் பேசிக்கொண்டிருக்கு மிக்காலத்தில், அப்படி வீடு கட்டிக் கொடுத்த மூன்று வருடத்துக்குள்ளாக சர்மா நகர் வீடுகள் மழைக்குத் தாக்குப் பிடிக்காமல் வீடுகள் கரைந்து போய் சுவர்களும் கூரைகளும் டமுது பட்டுக் இடிகின்றன. சுடுகாட்டுக்குப் பக்கத்தில் இந்தக் காலனிகள் அமைக்கப்பட்டிருப்பதால் மனிதவாசத்துக்கு இலாயக்கற்றிருக்கிறது. மல முச்சேறும் சகதியுமாகி நடமாடவே முடியவில்லை, மற்றும் ஆஸ்பத்திரி, பள்ளிக்கூட வசதிகளும் சரிவரக் கிடையாது.

#### ஆடிட்டரே ஊழல்

சர்க்கார் கணக்குகளை தணிக்கை செய்து ஊழல்களை கண்டு பிடிக்க ஆடிட்டர்கள் நியமிக்கப்பட்டுள்ளார்கள். அவர்களது எண்ணிக்கை போதாது என்று அதிகரித்து விடுவதினாலும் பிரச்சினை தீராது. நியமிக்கப்பட்ட ஆடிட்டர்களும் யோக்கியமானவர்களாக இருந்தால்தான் கணக்குகளின் உண்மை நிலைமையை அறிந்துகொள்ள முடியும்.

#### சூதாட்ட ஜமீன்தார்களுக்கு

இவ்வருடம் ஜமீன்தார்களுக்கென 20 லட்சம் ரூபாய் ஒதுக்கப்பட்டுள்ளது. சட்டத்தில் வருடா வருடம் இவ்வளவு தொகை ஜமீன்தார்களுக்கு [illegible]

#### கேஸ் போடும் அழகு

[illegible] பருப்பு என்று விற்றதாக போலீஸார் ஒரு வழக்கு தொடர்ந்தார்கள். சாம்பிளுக்கு சிறிது பருப்பை எடுத்துக் கொண்டு மீதியை வியாபாரியிடமே விட்டிருக்கலாம். அல்லது இரண்டொரு மாதத்தில் வழக்கை விசாரித்து முடிவு செய்திருக்கலாம். அப்படிக்கில்லாமல் வருடக் கணக்கில் வழக்கை நீடித்ததால், வியாபாரியிடமிருந்து பறிமுதல் செய்யப்பட்ட பருப்பு உழுத்துப்போய் விட்டது. வழக்கும் வியாபாரிக்கு சாதகமாக தள்ளுபடி செய்யப்பட்டு விட்டது. அதனால், பறிமுதல் செய்யப்பட்ட பருப்புக்கு நஷ்ட ஈடு கொடுக்க வேண்டியேற்பட்டது. இதனால் சர்க்கார் பணம் வீண் விரயமாக்கப்பட்டது.

#### விவசாயிகளுக்கு

இப்படி வீண் விரயம் செய்யப்படுவதை தவிர்த்து, அந்தப் பணத்தை விவசாயிகளுக்கு நன்மை செய்யப் பயன்படுத்தியிருக்கலாம்.

வடாற்காடு ஜில்லா வறண்ட ஜில்லா. எனது தொகுதியில் ஏரி மராமத்து செய்து விவசாயிகளுக்கு தண்ணீர் வசதி செய்து தரவேண்டும்.

வடாற்காடு ஜில்லாவுக்கும் குமரி ஜில்லாவுக்கும் பாலிடெக்னிக் பள்ளி ஏற்படுத்தப்படுவதை நான் வரவேற்கிறேன். ஆனால் அதை ஒரு வருடத்துக்குள் கட்டி முடித்து விடவேண்டும், ஜில்லாவுக்கு ஒரு பாலிடெக்னிக் பள்ளி விதம் ஏற்படுத்த வேண்டும்" என்றார்.

#### என். மருதாசலம்

கம்யூனிஸ்ட் உறுப்பினர் தோழர் என். மருதாசலம் பேசுகையில், "4 கோடி ரூபாய் உபமானியமாக ஒதுக்கியும்கூட இதில் ஹரிஜனங்களுக்கு ஒதுக்கப்பட்ட பணம் மிகக் குறைவாக இருக்கிறது. கோவை நகரத்திலுள்ள ஹரிஜன மாணவர்களை ஹாஸ்டல்களில் அதிகாரிகள் அனுமதிப்பதில்லை. (இச்சமயத்தில் அமைச்சர் கக்கன் குறுக்கிட்டு, "அனுமதிக்கிறார்கள்" என்றார்.)

அதற்கு மருதாசலம் பதிலளிக்கையில், "கோவை நகரத்துக்கு 5 மைல்களுக்கு அப்பாலிருந்து வருகிறவர்களுக்குத்தான் ஹாஸ்டல் வசதி செய்கிறார்கள். கோவை நகரில் உள்ளவர்களுக்குக் கொடுப்பதில்லை" என்று கூறிவிட்டு மேலும் பேசுகையில், கோவை நகரின் தண்ணீர் திட்டத்தை நிறைவேற்ற கோவை நகரசபையின் முயற்சிகளுக்கு சர்க்கார் உதவ வேண்டுமென்[illegible] சர்க்கார் ஏற்கவேண்டுமென்றும் கூறினர்.

## விலை ஏற்றமும் விவசாயியின் ஏக்கமும்

சென்னை, செப். 11—

உபமானியக் கோரிக்கை மீது திரு. ஜெஞ்சால் கவுண்டர் (ஜ கா) பேசுகையில், "8 ரூபாய், 9 ரூபாய்க்கு விற்ற ஒரு டீசல் ஆயில் பாரல் இன்று ரூ. 74-க்கு விற்கிறது. ரூ $2\frac{1}{4}$-க்கு விற்ற பிண்ணாக்கு இன்று 24 ரூபாய்க்கு விற்கிறது 8 அல்லது 9 ரூபாய்க்கு விற்ற அமோனியம் சல்பேட் இன்று ரூ 39-க்கு விற்கிறது. இந்த விலைக்கு நல்ல மார்க்கெட்டில் கிடைக்காததால் கள்ளமார்க்கெட்டில் ரூ 50-க்கு கிடைக்கிறது. ரூ 5 அல்லது 6-க்கு விற்ற வண்டிக்கட்டு இன்று 60 ரூபாய்க்கு விற்கிறது.

இப்படி விவசாயத்துக்கு அவசியமான பொருள்களின் விலை அதிகரித்து விற்றால், விவசாயிகள் எப்படிப் பிழைப்பது? எங்கள் செஞ்சி தாலுகாவின் நிலைமை இப்படி இருக்கிறது" என்றார்.

#### 7000 பேருக்காவது ஒரு டிஸ்பென்சரி உண்டா?

அடுத்து சேலத்தைச் சேர்ந்த கந்தசாமி முதலியார் (காங்) பேசுகையில், "நாங்கள் டாக்டர் உள்ள ஆஸ்பத்திரிகூட கேட்கவில்லை. 7000 மக்கள் வசிக்கக்கூடிய பிரதேசத்துக்கு மருந்து உதவி செய்யக்கூடிய ஒரு ரூரல் டிஸ்பென்சரியாவது வைக்கவில்லையே என்றுதான் வருந்துகிறோம்."

#### ஒரு குடம் தண்ணீர் ஒரு அணா

அவர் மேலும் பேசுகையில் "எங்கள் பகுதிகளில் தண்ணீர்ப் பஞ்சம் இவ்வளவு அவ்வளவு அல்ல. ஒரு அணா கொடுத்து ஒரு குடம் தண்ணீர் வாங்குகிறார்கள். நம்முடைய ஆட்சியில் மிகச் சாதாரணமான இந்தக் குறைகளைக்கூட தீர்க்க முடியவில்லையே!" என்றார்.

### தரகுமண்டி கமிஷன் மண்டித் தொழிலாளர்கள் கூட்டம்

திண்டுக்கல், செப். 8—

திண்டுக்கல் தரகு மண்டி கமிஷன் மண்டித் தொழிலாளர்கள் பொதுக்குழு கூட்டம் செப். 6-ந் தேதி நடைபெற்றது. திரு. வி. வெங்கிடுசாமி [illegible] பி. கந்தசாமி [illegible] ஆகவும், [illegible] பொருளாளராகவும் மற்றும் 7 [illegible] ஆகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். (ந. வி.)

# இடைக்கால நிவாரணம் தருக! விலைவாசியைக் கட்டுப்படுத்துக! பஸ் கட்டணத்தை உயர்த்தாதீர்!

## அரசாங்க ஊழியர்களின் கோரிக்கை

சென்னை, செப். 11—

இன்று மாலை மெமோரியல் ஹாலில் நடைபெற்ற அரசாங்க ஊழியர் பொதுக்கூட்டத்தில் மத்திய அரசாங்க ஊழியர்களுக்கு அளிக்கப்படும் பஞ்சப்படி அளவிற்கு மாநில அரசாங்க ஊழியர்களின் பஞ்சப்படியை உயர்த்தி, உடனடியாக இடைக்கால நிவாரணம் வழங்க வேண்டுமென்று தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. இக்கூட்டத்திற்கு திரு. பாண்டித்துரை பி. ஏ., பி. எல். தலைமை வகித்தார். வந்திருந்தோரை திரு. கபாலி வரவேற்றுப் பேசினர். சென்னை நகர என். ஜி. ஓ. சங்க முன்முயற்சியில் நடைபெற்ற இக்கூட்டத்தில் செக்ரட்டேரியட் சங்கம், கடைநிலை ஊழியர் சங்கம், மின்சார ஊழியர் சங்கம், அரசாங்கப் போக்குவரத்து ஊழியர் சங்கம், கார்ப்பொரேஷன் தொழிலாளர் சங்கம் முதலான பதினெட்டு சங்கங்கள் பங்கெடுத்துக்கொண்டன. திருவாளர்கள் டி. பி. ஏழுமலை எம். எல். ஏ. கோவிந்தசாமி, எம். எல். ஏ. கே. சட்டநாதக் கரையாளர், எம். எல். ஏ. கிருஷ்ணமூர்த்தி எம். எல். சி ஆகியோரும் இதில் கலந்து கொண்டு சொற்பொழிவாற்றினர்.

திரு. டி. பி. ஏழுமலை பேசுகையில், தொழிலாளிவர்க்கத்தின் ஆதரவு என். ஜி. ஓ.க்களுக்கு என்றென்றும் உண்டு என்று உறுதி கூறினர். திரு. ஜி. கிருஷ்ணமூர்த்தி எம். எல். சி பேசுகையில், ஆசிரியர்களும் என். ஜி. ஓ.க்களே என்றும், அவர்களில் பலர் அரசாங்க ஊழியர்களாக இருப்பதுமன்றி, அரசாங்க ஊழியர்களுக்களிக்கப்படும் பென்ஷன், பஞ்சப்படி முதலியன ஆசிரியர்களுக்கும் அளிக்கப்படுவதால் அவர்களும் என். ஜி. ஓ.க்களேயாவர் என்றும் குறிப்பிட்டார். ஏ. பி. சி. டி விட்டமின் சாப்பிடவேண்டுமென்று போதிக்கும் ஆசிரியர்களுக்கு சாப்பிட உணவில்லையென்றும், உணவு விலைவாசிப் பொருட்கள் ஏறுமுகத்தில்தான் சென்று கொண்டிருக்கின்றன வென்றும் அவர் குறிப்பிட்டார். நிதி இல்லையென்று சொல்லாமல், இருக்கும் நிதியில் இருந்தாவது என். ஜி. ஓ.க்களுக்கு நிவாரணம் அளிக்க வேண்டும் என்று அவர் கேட்டுக்கொண்டார்.

தமிழ்நாடு என். ஜி. ஓ. சங்கப் பொதுச் செயலாளர் பேசுகையில், பல ஸ்தாபனங்கள் ஒன்றுபட்டுள்ளதை வரவேற்று இந்த ஒற்றுமை என்றும் நீடிக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார். சர்க்கார் திட்டத்தில் பல ஊதாரிச்செலவுகள் ஏற்படுவதைத் தடுக்க அரசாங்க ஊழியர்களின் ஒத்துழைப்பு அவசியமென்றும் அவர் குறிப்பிட்டார். மாகாணப் பிரிவினைக்கு முன்பு 44 கோடி ரூபாய் வருமானமிருந்தபொழுது 20 கோடி ரூபாய் அரசாங்க நிர்வாகத்திற்குச் செலவிடப்பட்டதென்றும் ஆனால் ஆகிரா, மைசூர் பிரிந்தபோன பிறகு 73 கோடி ரூபாய் வருமானமிருந்தும் இன்று முன்றில் ஒரு பங்குதான் நிர்வாகத்திற்குச் செலவு செய்யப்படுகிறதென்றும் அவர் குறிப்பிட்டார்.

செக்ரட்டேரியட் அசோஸியேஷன் தலைவர் முத்துப் பிள்ளை, போராட்டம் ஏற்படுமானால் தங்கள் சங்கம் நிச்சயம் ஆதரவளிக்கும் என்று தெரிவித்தார். திரு. ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ. பேசுகையில், பஞ்சப்படி இன்னும் கொடுக்க வேண்டிய நிலையில் இருப்பது அவமானகரமானதென்றும், மூன்றாவது திட்டத்திலாவது என். ஜி. ஓ.க்களின் சம்பள உயர்விற்கு உருப்படியான திட்டம் போடப்பட வேண்டுமென்றும், மற்ற ஸ்தாபனங்களின் ஒற்றுமையையும், பொது மக்களின் ஒத்துழைப்பையும் என். ஜி. ஓ.க்கள் பெற்றுக்கொள்வது அவசியம் என்றும் போராட்டத்தில் யோசித்து இறங்க வேண்டுமென்றும், ஆனால் இறங்கினபின் வாபஸ் வாங்கக் கூடாதென்றும் பேசினர்.

கடைசியாகப் பேசிய திரு. சட்டநாதக் கரையாளர் எம். எல். ஏ. ஹைவேஸ், மராமத்து இலாகாக்களில் மாதம் ரூ 10, ரூ. 15 சம்பளம் பெற்று வரும் 'ஓர்க்சார்ஜ் பிரிவிலுள்ள மஸ்தூர்கள், 'சித்தாள்'களும் அரசாங்க ஊழியர் பகுதியில் அடங்குவர் என்றும், சர்வீஸ் கமிஷன் இல்லாது எவ்வித வசதியும் அளிக்கப்படாது. இவ்வாறு ஒரு பிரிவினை வைத்திருப்பதுஒரு ஜனநாயக நாகரிக நாட்டிற்கே அவமானகரமாகும் என்று குறிப்பிட்டார்.

உணவுப் பொருள் விலைவாசி உயர்வைப் பற்றி அவர் குறிப்பிடுகையில், இதனால் பாதிக்கப்படாத பகுதியினர் இல்லையென்றும், குறிப்பாக ரூ. 100 முதல் ரூ. 200 வரை சம்பளம் வாங்கும் பகுதியினரே அதிகம் பாதிக்கப்பட்டுள்ளனர் என்றும் குறிப்பிட்டார். மத்தியதர வர்க்கத்தினர், குறிப்பாக அதிகார வர்க்கத்தின் அதிருப்தி வளருமானால் ஜனநாயகத்திற்கே ஆபத்து ஏற்படும் என்றும் அரசாங்கத்தின் ஆணையை நிறைவேற்றும் அதிகாரிகளிடையே அருப்தி வளர்ந்தால் அயூப்கான்கள் தோன்றுவது சாத்தியம் என்றும் அவர் எச்சரித்தார்.

மத்தியதர வர்க்கந்தான் நாட்டின் சிந்தனைக் கொழுந்துகள் என்றும், தங்களுடைய குரலை எழுப்பி நாட்டிற்கு வழிகாட்டியாக அவர்கள் திகழவேண்டும் என்றும், விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவதில் அவர்களுக்குப் பெருத்த பங்குண்டென்றும் திரு. சட்டநாதன் குறிப்பிட்டார். விலைவாசி உயர்வை எதிர்த்துத்தொடர்ந்து ஸ்தாபனரீதியாக அரசாங்க ஊழியர்கள் கிளர்ச்சி செய்ய வேண்டுமென்று அவர் கேட்டுக் கொண்டார். சம்பளக் கமிஷன் அறிக்கை ஏதாவது சம்பள உயர்வு அளிப்பதுகூட, இடைவிடாது, ஒற்றுமையுடன் அரசாங்க ஊழியர்கள் குரல் எழுப்புவதைப் பொருத்துதான் உள்ளது என்று அவர் குறிப்பிட்டார். மேலும் அவர் பேசுகையில், அன்றாடத் தேவைப் பொருட்கள் அனைத்தும் அரசாங்க ஊழியர்களுக்குக் குறிப்பிட்ட விலையில் மலிவாகக் கிடைப்பதற்கு அரசாங்கம் உத்தரவாதம்செய்யவேண்டுமென்று கேட்டுக்கொண்டார். இக்கூட்டத்தில் கலந்துகொண்டுள்ள சங்கங்கள் அனைத்தும் ஒரு சம்மேளனமாக இணைந்துகொண்டு ஒற்றுமைக் குரல் எழுப்புவது அரசாங்க ஊழியர்களின் கோரிக்கைகளை ஆக்கமளிக்கும் என்று அவர் கூறினர்.

கடைநிலை ஊழியர் சங்கப் பொதுச் செயலாளர் திரு. எத்திராஜ் பேசுகையில், அரசாங்க ஊழியர்கள் பாவரும் ஒரே ஸ்தாபனத்தின் கீழ் ஒன்றுபட வேண்டுமென்றும், ஒன்றுபட்ட சக்தியை அரசாங்கம் உதாசீனம் செய்ய முடியாதென்றும் பேசினர்.

பஸ் கட்டணத்தை உயர்த்தக் கூடாதென்றும், அரசாங்க ஊழியர்களுக்கு மலிவான கட்டணத்தில் பிரயாணப் பாஸ் வழங்க வேணடும், விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்தவேண்டுமென்றும் இக்கூட்டத்தில் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

# தேசிய மாதர் சம்மேளன 3-வது மகாநாடு

## நிதி உதவ வேண்டுகோள்

சென்னை, செப். 10—

இந்திய தேசிய மாதர் சம்மேளன மத்தியக் கவுன்சில் உறுப்பினரும் சென்னை ஜனநாயக மாதர் சங்கப் பொதுக் காரியதரிசியுமாகிய திருமதி என். எஸ். ருக்மணி அம்மாள் பின்வருமாறு எழுதுகிறார்:

"இந்திய தேசிய மாதர் சம்மேளனத்தின் 2-வது மகாநாடு விஜயவாடாவில் 2 ஆண்டுகளுக்கு முன் நடைபெற்றது. அம்மகாநாட்டின் தீர்மானங்களின் அடிப்படையில் சென்னையில் ஜனநாயக மாதர் சங்கத்தின் சார்பில் பல வேலைகள் நடைபெற்றிருக்கின்றன.

விலைவாசி உயர்வைத் தடுத்து, நியாயவிலைக் கடைகள் திறக்கப்பட வேண்டுமென்றும், வரதட்சிணை முறையை ஒழிக்க சட்டமியற்றக் கோரியும், மாகாண சர்க்காருக்கும், மத்திய சர்க்காருக்கும் மகஜர் அனுப்பியுள்ளோம். உலக சமாதான இயக்க சம்பந்தமான வேலைகளிலும் ஜனநாயக மாதர் சங்கம் ஈடுபட்டு வந்துள்ளது. மேலும் தையல் வேலைகள், குழந்தைகளுக்குப் படிப்பு சொல்லிக் கொடுப்பது ஆகியவையும் செய்து வந்துள்ளோம்.

இப்பொழுது தேசிய மாதர் சம்மேளனத்தின் 3-வது மகாநாடு அக்டோபர் 4 முதல் 6 வரை உத்தரப் பிரதேசத்தில் காசி நகரத்தில் நடைபெறவிருக்கிறது. அம்மகாநாட்டுக்கு சென்னையிலிருந்தும் பிரதிநிதிகளை அனுப்பவேண்டும்.

சென்னையில் ஜனநாயக மாதர் சங்கத்தின் கீழ் 7 கிளைகள் இயங்குகின்றன. சங்க அங்கத்தினர்களில் 50-க்கு ஒரு பிரதிநிதி வீதம் தேர்ந்தெடுத்தாலும் குறைந்தபட்சம் 8 பிரதிநிதிகளை மகாநாட்டுக்கு அனுப்பலாம்.

ஆனால் பொருளாதார நெருக்கடியின் காரணமாகப் போக முடியாத நிலைமை ஏற்படக் கூடாது.

ஆகவே, சகோதரிகளே, சகோதரர்களே, பெண்கள் முன்னேற்றத்திற்கும், ஆக்கவேலைகளுக்கும் ஊக்கம் அளிக்கும் முறையில் உங்களாலான பண உதவி செய்து எங்களுக்கு உற்சாகமும், ஊக்கமும் கொடுத்து, மகாநாட்டிற்குச் சென்றுவர, ஆவன செய்யுமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

குமரி ஜில்லா

# எச். அண்டு டபுள்யூ மணல் ஆலை

## திறப்பதுபற்றி கலெக்டர்முன் முடிவு

நாகர்கோவில், செப். 5—

மணவாளக்குறிச்சியில் மூடப்பட்டிருக்கும் மணல் ஆலை திறப்பது பற்றி ஆலோசனை கூட்டம் குமரிமாவட்ட கலெக்டர் முன்னிலையில் நடைபெற்றது. உதவி கலெக்டர் விஜயராகவனும், கம்பெனி நிர்வாகம் சார்பில் மானேஜர் வெப்ஸ்டர், நீலகண்டன் நாயர், ஜார்ஜ் ஆகியோரும், எம்ப்ளாய்ஸ் யூனியன் சார்பில் திருவாளர்கள் பி. என். பிள்ளை, டி. எஸ். நாராயணன், எம். எம். அலி ஆகியோரும் கலந்து கொண்டனர். கீழ்க்கண்ட முடிவுகள் எடுக்கப்பட்டன.

1. கம்பெனியில் தேங்கி கிடக்கும் இல்மனைட் மணல் விற்பனையானதும் கலெக்டர் முன்னிலையில் நிர்வாகத்தினரும், யூனியன் பிரதிநிதிகளும் மீண்டும் கூடி மணல் ஆலையை திறப்பதுபற்றி ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

2. இதுவரையிலும் பிரிவிலேஜ் லீவு, மைன்ஸ் லீவு எடுக்காதத்தொழிலாளர்களுக்கு அந்த நாட்களுக்கான ஊதியத்தைக் கொடுப்பதெனவும் நிர்வாகத்தினர் ஒப்புக்கொண்டுள்ளனர். மேற்கூறிய முடிவுகள் எடுக்க இருதரப்பினரையும் சந்தித்துப்பேச கலெக்டர் எடுத்துக்கொண்ட முயற்சி பாராட்டத் தக்கதென்று தொழிலாளர்கள் கூறிக்கொள்கின்றனர். இல்மனைட் மணல் விரைவில் விற்பனையாகி மணற் கம்பெனி திறக்கப்பட்டு வேலையின்றித் தவிக்கும் 3000 குடும்பத்தினருக்கு சீக்கிரம் வாழ்வு கிடைக்குமென்று எதிர்பார்க்கப்படுகிறது. (ந. வி.)

# உணவுப் பற்றாக்குறை செயற்கையால் விளைந்ததே

## உணவு மந்திரி படீலின் திடீர் ஞானோதயம்!

### மந்திரிகளுக்கு உணவுத்துறை சிம்மசொப்பனம் என்கிறார்

பம்பாய், செப். 12—

இந்த நாட்டில் உணவுப் பற்றாக்குறை இல்லை. பற்றாக்குறை என்பது செயற்கையாக விளைந்த ஒன்றே என்று இங்கு பேசிய மத்திய சர்க்கார் உணவுத்துறை மந்திரி எஸ். கே. படீல் கூறினர்.

மொத்த வியாபாரிகள், சில்லரை வியாபாரிகள் உணவுப் பண்டங்கள் வாங்குவோரெல்லோரும் நாணயமாக நடந்து கொண்டால் உணவுப் பற்றாக்குறை இருக்காது என்றார்.

உபரியாக உற்பத்தி செய்யும் ராஜ்யங்களைச் சேர்ந்த மக்களும் சர்க்காரும் நாடு முழுவதற்கும் தர்ம கர்த்தாக்கள். பற்றாக்குறை பகுதிகளுக்கு உணவு அளிப்பது அவர்கள் கடமை என்றார்.

நாட்டு மக்கள் அனைவருக்கும் போதிய உணவு உற்பத்தி செய்து கொள்வதற்குத் தேவையான நிலம் இந்த நாட்டில் இருக்கிறது என்று அவர் கூறினர்.

மந்திரிகளுக்கு சிம்ம சொப்பனமாக இருக்கும் ஒரு துறை உணவு விவசாயத்துறையே என்றும் தம்மைவிடச் சிந்தனை சக்தி மிகுந்த பல மந்திரிகள் வீழ்ச்சிக்கு இத்துறை காரணமாக இருந்திருப்பதாயும் அவர் கூறினர்.

வங்க உணவுப் போராட்டம் ஒரு அரசியல் விளையாட்டு என்று அவர் அவதூறு செய்தார். நிகழ் வருடத்தில் 7 கோடி 35 லட்சம் டன் உணவு உற்பத்தியாகியுள்ளது என்றார்.

# அரிசிப் பதுக்கல்காரர்களின் சமூகவிரோத நடவடிக்கைகளை அனுமதிப்பதா?

## விழுப்புரம் அருகில் மர்ம வியாதி

விழுப்புரம், செப். 2—

விழுப்புரத்தை அடுத்த மேட்டுப்பாளையம் என்ற கிராமத்தில் புதுவிதமான வியாதி ஒன்று பரவிவருகின்றது. இந்த வியாதிக்கு அறிகுறியாக கண் சிவந்து, பார்வை இழந்து, உடல் நடுக்கம், மூளைக் கோளாறு, பிதற்றல், தலைவலி, ஜுரம், வாயிலும் மூக்கிலும் ரத்தப் போக்கு இந்த முறையில் ஆரம்பிக்கின்றது. காலரா, பிளேக் போன்ற நிலையில் இந்த வியாதியின் கொடுமையுள்ளது.

இந்த வியாதி சிறு குழந்தையிலிருந்து 40 வயதுள்ளவர் வரை பிடிக்கிறது.

சர்க்கார் ஆஸ்பத்திரியில் மேற்கண்ட வியாதியஸ்தரை சேர்த்ததில் வியாதியின் தன்மை புரிந்துகொள்ள முடியவில்லையாம். இந்த வியாதியின் கொடுமையால் 4 பேர் இதுவரை இறந்துள்ளனர்.

ஹோமியோபதி டாக்டர் பாலகிருஷ்ணன் தான் கவனித்த 24 கேஸ்களில் 23 கேஸ்கள் வெற்றி பெற்றன என்றும் ஒரு கேஸ் காலம் கடந்து வந்ததினால் இறக்க நேரிட்டது என்றும் கூறினர். இந்த வியாதி சம்பந்தமாய் சம்பந்தப்பட்ட இலாக்காக்களுக்கும் அதிகாரிகளுக்கும் நானும், கிராம மக்களும் தகவல் அனுப்பியுள்ளோமென்றார். வியாதி மேலும் பரவிக்கொண்டே உள்ளது என்றார்.

உதவி ஜில்லா மருத்துவ அதிகாரியும், சுகாதார அதிகாரியும் ஸ்தலத்திற்கு சென்று பார்வையிட்டு ஆவன செய்துவருகின்றனர்.

வியாதியஸ்தரின் இரத்தம் எடுக்கப்பட்டு பரிசோதனைக்கு அனுப்பப்பட்டுள்ளதாகத் தெரிகிறது.

வியாதியஸ்தர் தினம் 8 பேர் ஆஸ்பத்திரிக்கு கொண்டுவரப்படுகின்றனர்.

### உட்பிரியார் போராட்டம்

கூடலூர், செப். 8—

நீலகிரி ஜில்லா, கூடலூர் தாலுகா கமிட்டி ஆபீஸ் 6-ந் தேதி திறந்துவைக்கப்பட்டதை ஒட்டி பொதுக்கூட்டம் தோழர் குஞ்சுகுட்டன் தலைமையில் நடைபெற்றது. கூட்டத்திற்கு முன்னால் ஊர்வலம் நடைபெற்றது. [illegible] காங்கிரஸ் அரசாங்கத்தின் போக்கைக் கண்டித்தார். உட்பிரியார் [illegible] போராட்டத்திற்கு ஆதரவு தருமாறு கேட்டுக்கொண்டார்.

தோழர் [illegible] பியின் தொழிலாளர் விரோதப் போக்கை [illegible] காங்கிரஸ் கட்சி தொழிலாளி வர்க்கத்திற்கு [illegible] குறிப்பிட்டார். சென்னை சர்க்காரை [illegible] கண்டித்தார். (க-சி)

### வாலிபர் சங்கக் கூட்டம்

மன்னார்குடி, செப். 31—

மன்னார்குடி ஜனநாயக வாலிபர் சங்கத்தின் 2-வது ஆண்டு விழா 30-8-59 ஞாயிற்றுக்கிழமை மாலை 6-30 மணிக்கு தேரடி மைதானத்தில் நடைபெற்றது.

சேதுராமன் தலைமை தாங்கினர். சங்கச் செயலாளர் கபீர்தாஸ் எல்லோரையும் வரவேற்றார். மன்னார்குடி நகர மன்ற உறுப்பினர் இராமச்சந்திரன் சங்கக் கொடியை ஏற்றினர்.

தஞ்சை சரபோஜி கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் ஔவை நடராஜன் 'எப்போதும் இருப்பது' என்ற தலைப்பில் சொற்பெருக்காற்றினர். மற்றும் நாராயணசாமி, பாரதி மோகன், பாலசுப்ரமண்யம் முதலியோரும் பேசினர்கள்.

இரவு 10 மணிக்கு இளங்கோ தலைமையில் சிவாஜி மன்றத்தாரின் குலோத்துங்கன் என்ற நாடகம் நடிக்கப்பட்டது.

### கன்னந்தேரியில் விவசாயிகள் கூட்டம்

சேலம் செப். 4—

சேலம் ஜில்லா கன்னந்தேரியில் சங்ககிரி தாலுகா விவசாயிகள் சங்கக் கூட்டம் நடைபெற்றது.

வி. முத்துசாமி வி. எம். கந்தசாமி, ஏ. கிருஷ்ணன், எஸ். சுந்தரம், ஏ. ரங்கன், கே. ஆர். ராமசாமி, பெருமாள் கவுண்டர், தைலாக் கவுண்டர், பி பச்சியண்ணன், கே. எம். கோபால் சாமி, எம். பி. பச்சமுத்துக் கவுண்டர் முதலியோர் நிர்வாகிகளாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## தோழர் மணலி கந்தசாமி கேள்வி

தஞ்சை, செப். 3—

"உணவுப் பொருள்களைப் பதுக்குபவர்கள் மீது கடும் நடவடிக்கை எடுக்க அரசாங்கம் தயங்குகிறது பிற எதிர்க்கட்சிகளும் இந்த உணவுப் பிரச்சினையில் கம்யூனிஸ்ட் கட்சியுடன் ஒத்துழைத்தால் உணவு நெருக்கடியை நாம் சமாளிக்கமுடியும். பதுக்கல் பேர்வழிகளின் சமூகவிரோத நடவடிக்கைகளை ஊக்குவிக்கக்கூடாது எனக் கம்யூனிஸ்ட் கட்சியின்சார்பில் இங்கு நடைபெற்ற பொதுக் கூட்டமொன்றில் பேசுகையில் தோழர் மணலி கந்தசாமி கூறினர்.

கூட்டத்துக்குத் தோழர் எம். எஸ் கணபதி தலைமை வகித்தார்.

தோழர் மணலி கந்தசாமி தொடர்ந்து பேசுகையில், கேரளப்பிரச்சினை இந்தியஜனநாயகத்துக்கோர் எச்சரிக்கையாகுமென்றார். இந்த நாட்டின் சௌகரியக்காரக் கும்பல் எவ்வளவு தூரம் நாட்டை ஆட்டிப் படைக்கின்றனர் என்பதை இது உணர்த்துகிறது என அவர் கூறினர்.

கேரளத்தில் கொள்ளைக்காரர்கள் போராட்டம் நடத்தினர். மத்திய அரசும் பத்திரிகைகளும் அந்த 'விடுதலை'க்காரர்களின் போராட்டத்தை ஆதரித்தன. இப்பொழுது வங்கத்தில் மக்கள் போராட்டத்தைக் கண்டு ஏன் மௌனம் சாதிக்கின்றன? என அவர் கேட்டார்.

#### சீன-திபேத் விவகாரம்

"சீனாவின் செயல் குறித்து இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் நிலைமை என்ன என்று கேட்கின்றனர். அவர்களை நான் ஒன்று கேட்கிறேன். ஒரு கம்யூனிஸ்டு நாடு பிற நாட்டினை ஆக்கிரமிக்க அதன் கொள்கை இடம் தருமா? அல்லது, இதுவரை எந்த நாட்டையாவது கம்யூனிஸ்டு நாடு ஆக்கிரமித்தது என வரலாறு உண்டா?

"திபேத்தில் சீனா எடுத்த நடவடிக்கை உலகப் பாதுகாப்பு நடவடிக்கை. இதை யாரும் மறுக்க முடியாது. கம்யூனிஸ்ட் கட்சி தலையெடுக்க அனுமதிக்கக் கூடாது என்ற நோக்கத்துடன் வீண் அவதூறுகள் கூறப்படுகின்றன இந்த அவதூறு இயக்கம் வெற்றிபெறப் போவதில்லை. இது சர்வ நிச்சயம்."

உடனடியாக சீன-இந்தியப் பிரதமர்கள் சந்தித்துப் பேச வேண்டும் என அவர் வலியுறுத்தினர்.

அவர் தொடர்ந்து பேசுகையில், ராஜாஜி, மஸானி முதலியோர் தொடங்கியுள்ள சுதந்திராக் கட்சி பற்றியும் அரிசிப் பதுக்கல் காரர்களின் சமூக விரோதப் போக்கு பற்றியும் குறிப்பிட்டார்.

### ஜனசக்திக்கு திருமண நன்கொடை

திண்டுக்கல், செப். 11—

கோவை ஜில்லா திண்டுக்கல் தோழர் ஜோதிதுரை புதுவன் ஜவஹர் திருமணத்தின் போது தோழர் ஜீவா மூலம் [illegible] ஜனசக்திக்கு ரூ 25 [illegible] திருமணத்திற்கு வந்திருந்த அன்பர்கள் ரூ. 90 ஜனசக்திக்கு நன்கொடை தந்தனர்.

## தோல் பதனிடும் தொழிலாளர்போனஸ் வெற்றி

சேலம், செப். 2—

சேலம் ஜில்லா தோல்பதனிடும் தொழிலாளர்கள் கடந்த மாதத்தில், போனஸ் கோரி, தோல்ஷாப் முதலாளிகள் வீடுகளுக்கு முன்னால்சத்தியாக்ரஹப் போராட்டம் ஆரம்பித்தனர். 4-8-59ல் லேபர் ஆபீசர் முன் பேச்சுவார்த்தை நடந்ததில் கத்தியாட்களுக்கு $1\frac{1}{2}$ மாத சம்பளம் (ரூ 61-14-0) சால் ஆட்களுக்கு $1\frac{1}{2}$ மாத சம்பளம் (49-8-0) போனஸ் தருவதாக முதலாளிகள் ஒப்புக்கொண்டனர்.

இதர தொழிலாளர்களுக்கும் அவரவர் சம்பளத்தில் $1\frac{1}{2}$ மாத சம்பளத்தை போனஸாகக் கொடுக்க முதலாளிகள் இணங்கினர். 5-8-59ல் தொழிலாளிகளுக்கு போனஸ் வழங்கப்பட்டது.

### சோழவந்தான் பஞ்சாயத்தில் கேரளத் தலையீட்டிற்குக் கண்டனம்

சோழவந்தான், செப். 5—

கேரள மத்திய தலையீட்டைக் கண்டித்து தோழர் எஸ். சுப்பிரமணியம் ஒரு தீர்மானம் கொண்டு வந்தார். அத்தீர்மானம் சட்ட விரோதமானதெனக் கூறி, நிகழ்ச்சி நிரலில் தீர்மானத்தைச் சேர்க்கவே தலைவர் மறுத்து விட்டார்.

31-8-59-ல் நடைபெற்ற பஞ்சாயத்துக் கூட்டத்தில் கண்டனத் தீர்மானம் நிகழ்ச்சி நிரலில் சேர்க்கப்படாமல் கூட்டமே நடைபெறக் கூடாதென்று எல்லா இடதுசாரி மெம்பர்களும் கோரினர்கள். கடைசியில் பெருவாரியான மெம்பர்களின் ஆதரவுடன் தீர்மானம் நிறைவேறியது. (ந. வி.)

### சர்க்காரின் தொழில் விரோத கொள்கைக்கு கண்டனம்

#### கோதண்டராமன் எம்.எல்.ஏ. பேச்சு

வாணியம்பாடி, செப். 5—

வாணியம்பாடி 3-வது வட்ட கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில் ஆர். கண்ணன் தலைமையில் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக் கூட்டம் நடைபெற்றது.

இதில் கலந்து கொண்ட வி. கே. கோதண்டராமன் எம். எல். ஏ. காங்கிரஸ் சர்க்கார் தொழில் விரோதக் கொள்கை [illegible] பற்றியும் [illegible] பற்றியும் குறிப்பிட்டார்.

# காங்கிரஸின் ஜனவிரோதப் போக்கை கண்டு பலர் விலகினர்

## பாதயாத்திரையில் அனுபவம்

### கம்யூனிஸ்ட் தலைவர்களுக்கு வழி நெடுக மகத்தான வரவேற்பு

மதுரை, செப். 8—

மதுரை ஜில்லா கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர்களின் பாதயாத்திரையின் 8-வது நாள் நிகழ்ச்சி தேனியிலிருந்து ஆரம்பமானது. காலையில் லக்ஷ்மிபுரம் அடைந்தனர். தலைவர்களை விவசாயிகள் எதிர் கொண்டழைத்தனர். காங்கிரஸ்தலைமை கேரளத்தில்நடந்து கொண்ட முறையை சோஷலிஸ்ட் கட்சி கண்டிக்காததால் வெளியேறிய நண்பர்கள் தோழர் ஏ. பாலசுப்பிரமணியத்தைக் கண்டு பேசினர். மாலையில் லெக்ஷ்மிபுரத்திலிருந்து புறப்பட்டு பெரியகுளம் வந்தடைந்தனர். போகும் வழியில் நாடு செழிக்க நிலச்சீர்திருத்தம் வேண்டும் என்பதின் அவசியம் குறித்து தோழர்கள் பலர் பேசினர்

பெரியகுளத்தில் விவசாயிகள் தொழிலாளர்கள் அடங்கிய மாபெரும் கூட்டத்தில் தலைவர்களுக்கு மாலையணிவிக்கப்பட்டு மேளதாளத்துடன் வரவேற்றனர். மீனாக்ஷியம்மன் படித்துறையில் தோழர் அப்துல் ரஹ்மான் தலைமையில் பொதுக்கூட்டம் நடைபெற்றது தோழர்கள் கே. பி ஜானகியம்மாள், ஏ. பாலசுப்பிரமணியம், வி. மதனகோபால் ஆகியோர் பேசினர்.

பல ஸ்தாபனங்களின் சார்பில் மலர் மாலையணிவிக்கப்பட்டது. காங்கிரசிலிருந்து விலகிய நண்பர் ஒருவர் தோழர் பாலசுப்பிரமணியத்துக்கு மாலையணிவித்து பேசினர். அவர் பேசும்போது குறிப்பிட்டதாவது:

நாங்கள் பல ஆண்டுகளாகக் காங்கிரஸ் கட்சியில் பணியாற்றினோம்: ஏழை விவசாயிகள் தொழிலாளர்களுக்கு நன்மை செய்த கேரள சர்க்காரை டிஸ்மிஸ் செய்து ஜனநாயகத்தை சில நிலப்பிரபுக்கள் கூண்டுவோருக்கு ஆதரவாக கொலைசெய்து விட்டனர். இதைக்கண்டு காங்கிரசிலிருந்து நாங்கள் வெளியேறிவிட்டோம். விவசாய சங்கம் அமைத்து பணியாற்றி வருகிறோம் என்று கூறினர்.

அடுத்த நாள் காலை பாதயாத்திரையினர் சாத்தா கோவில்பட்டியடைந்தனர், அங்கும் காங்கிரசிலிருந்து விலகிய நண்பர்கள், தலைவர்களை சந்தித்துப்பேசினர். பிறகு கண்டுவார்பட்டியை அடைந்தனர் மாலையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் ஏ. பாலசுப்பிரமணியம், மதனகோபால், ராமராஜ் ஆகியோர் பேசினர். பிறகு கல்லுப்பட்டிக்குச் சென்றனர். அதோடு பெரியகுளம் தாலுகாவின் பாதயாத்திரை முடிவுற்றது. அடுத்து பட்டிவீரன்பட்டிக்குப் புறப்பட்டனர். —ந. வி.

மே. வங்கத்தில்

# துப்பாக்கிப் பிரயோகங்கள் பற்றி பகிரங்க விசாரணை தேவை

## ஜோதிபாசு கோரிக்கை

## கொல்லப்பட்டவர் 80 பேர் எனத் தகவல்

கல்கத்தா, செப். 12—
பஞ்ச எதிர்ப்புக் கமிட்டியின் சார்பில் ராஜ்யம் பூராவிலும் நடைபெற்ற உணவுக் கிளர்ச்சியின்போது சென்ற வாரம் கல்கத்தாவிலும், ஹௌராவிலும் நடைபெற்ற போலீஸ் துப்பாக்கிப் பிரயோகங்கள் சம்பந்தமாக ஒரு பகிரங்க விசாரணை நடத்தப்பட வேண்டும், என்று மேற்கு வங்க சட்டசபையில் எதிர்க்கட்சித் தலைவரும், கம்யூனிஸ்ட் தலைவருமாகிய தோழர் ஜோதிபாசு (எம். எல். ஏ) இன்று கோரினர்.

பத்திரிகை நிருபர் மகாநாட்டில் தோழர் ஜோதிபாசு மேலும் பேசுகையில், தனக்குக் கிடைத்த தகவலின்படி போலீஸ் துப்பாக்கிப் பிரயோகங்களில் 80 பேர் கொல்லப்பட்டுள்ளனர். சுமார் 200 பேரைக் காணவில்லை, என்றார். (சர்க்கார் அறிக்கையில் கொல்லப்பட்டவர் 39 பேர் என்றும், காணமற்போனவர்கள் 100 பேர் என்றும் கூறப்பட்டுள்ளது.)

"ஆரம்ப முதலே உணவுக் கிளர்ச்சியினர் அமைதியான முறைகளையே கடைப்பிடித்தனர். ஆகஸ்ட் 31ந் தேதியன்று ராஜபவனத்திற்கு அருகில் கூடியிருந்த ஆயிரக்கணக்கான ஆண், பெண், குழந்தைகளின் மீது வேண்டுமென்றே தடியடிப் பிரயோகங்கள் நடத்தியதின் காரணமாக போலீசார்தான் மக்களை சமாதானப் பாதையிலிருந்தும் பிறழச் செய்தார்கள். ஆகவே நிராயுதபாணிகளான மக்கள்மீது போலீசார் நடத்திய அடக்குமுறைகளை அம்பலமாக்குவதற்கு ஒரு பகிரங்க விசாரணை அவசியமாகும்" என்றும் ஜோதிபாசு கூறினர்.

மக்களின் உணவு இயக்கம் காலிகளின் கைக்கு மாறிவிட்டது என்று சர்க்கார் கூறுவது அவதூறாகும் என்றும் ஜோதிபாசு கூறினர்.

உணவுக் கிளர்ச்சியின் எதிர்காலத்தைப் பற்றிக் கேட்டபோது, நாளையோ மறுநாளோ கமிட்டிகூடி அடுத்த நடவடிக்கை பாதையைப் பற்றி முடிவு செய்யும் என்றும் ஜோதிபாசு கூறினர்.

நடக்க இருப்பவை

**பாரதி விழா**

தமிழ் எழுத்தாளர் சங்கச் சார்பில் 14-9-59 மாலை 6-மணிக்கு மயிலை ராஜ ராஜேஸ்வரி பள்ளியில் (27, தெற்கு மாட வீதி,) பாரதி விழா நடைபெறும். திரு. வெ. சாமிநாத சர்மா தலைமையில் திருவாளர்கள்; ம. பொ. சிவஞானம், அகிலன், பகீரதன், கோ. சங்கரராஜு ஆகியோர் சொற்பொழிவாற்றுவர்.

●

பெத்துநாயக்கன் பேட்டை தமிழரசுக் கழகச் சார்பில் 14-9-59 மாலை 6-மணிக்கு கிருஷ்ணப்ப நாயக்கன் அக்கிரஹாரம் தெருவில் பாரதி விழா கொண்டாடப்படும். திரு. எஸ். ரங்கநாதம் தலைமையில் திருவாளர்கள் கவி. கா. மு. ஷெரீப், கோவை வெங்கடராமன், புலவர் கீரன். அ. மா. தேசிகாச்சாரி முதலியோர் பேசுவர்.

**இன்றைய சினிமா**

தமிழ் :
கெயிட்டி — வாழ்க்கை ஒப்பந்தம்
பாரத் — ,,
மஹாலக்ஷ்மி ,,
கபாலி — வண்ணக்கிளி
மஹாராணி — கள்வனின் காதலி
காமதேனு — நளதமயந்தி
பிரபாத் — ஜிம்போ
சரஸ்வதி — மகாதேவி
சயானி — வாழவைத்த தெய்வம்
பாரகன் — ,,
பிராட்வே — ,,
ராக்ஸி — ,,
வெலிங்டன் — மரகதம்
ஸ்ரீ கிருஷ்ணா — ,,
உமா — ,,
காஸினோ — கல்யாணப்பரிசு
பிரைட்டன் — ,,
சித்ரா — வீரபாண்டிய கட்டபொம்மன்
கிரௌன் — ,,
திருமகள் — வண்ணக்கிளி
வீனஸ் — பிரஸிடெண்ட் பஞ்சாட்சரம்
ஈராஸ் — நளதமயந்தி

★

ஹிந்தி :
ஸ்டார் — மெயின்-நாஸே-மெ-ஹூன்
அசோக் — கல் ஹமாரே ஹை
பிளாஸா — கைதி நெ. 911
பத்மனாபா — மாலிக்
ராஜகுமாரி — கரும்பூனை
செலக்ட் — முந்தடுகு (தெலுங்கு)

★

ஆங்கிலம் :
ஓடியன் — The 7th Voyage of Sinbad(A)
மிட்லண்ட் — The Fly
நியூ க்ளோப் — Twilight for the Goss
மினர்வா — Tarzan's Fight for Life
நியூஎல்பின்ஸ்டன் — The Big Money



## செப். 3-ம் தேதிய பி.டி.ஐ. செய்தி தவருனது; ஆதாரமற்றது

### கள்ள மதுக் கடத்தல் பற்றி புதிய அறிவிப்பு

பாண்டிச்சேரி, செப். 12—
வில்லியனூர் கம்யூனிலுள்ள சுல்தான் பேட்டையைச் சேர்ந்த பக்கீர் முகமது என்ற நபர்மீது மதுவிலக்குச் சட்டத்தின்கீழ் வானூர் போலீஸ் வழக்கொன்று பதிவு செய்துள்ளனர். சென்னை ராஜ்யத்துக்குள் கள்ளத்தனமாக மதுபானங்கள் கடத்த முயன்றதாக மேற்படி நபர் வேறிருவருடன் ஆகஸ்ட் 27-ல் கைது செய்யப்பட்டார் இந்த வழக்கு விசாரணை செப். 15-ல் திண்டிவனத்தில் நடைபெறும்.

**செப்டம்பர் 3-ல் வெளியான பி.டி.ஐ. செய்தி, இதுசம்பந்தமாகக் கைதுசெய்யப்பட்டவர் பாண்டிச்சேரி ராஜ்ய சட்ட சபையில் மக்கள் முன்னணி உறுப்பினராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ள ஜனுப் பக்கீர் முகமது என்று தவருக அறிவித்தது.**

பெயர்களில் இருந்த ஒற்றுமையுடன் இருவரும் ஒரே கம்யூனில் வசித்துவருபவர்கள் என்ற சூழ்நிலையும் இவ்வாறு தவருன அறிவிப்புக்குக் காரணமாயிருந்தன. —பி.டி.ஐ.

## கேரள நிலச்சீர்திருத்த சட்டம்

### ஜனாதிபதியைக் கம்யூனிஸ்ட் தலைவர்கள் சந்திப்பர்

புதுடில்லி, செப். 12—
கேரள கம்யூனிஸ்ட் எம். பிக்கள் (மக்கள் சபை, ராஜ்ய சபை கம்யூனிஸ்ட் உறுப்பினர்கள்) செப்டம்பர் 14ந் தேதியன்று ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத்தைக் கண்டு, விரைவில் கேரள நிலச்சீர்திருத்த மசோதாவுக்கு அங்கீகாரம் அளிக்கும்படி வற்புறுத்தப் போவதாகத் தெரிகிறது.

அத்தூதுகோஷ்டிக்கு மக்கள் சபை கம்யூனிஸ்ட் கட்சி துணைத் தலைவர் தோழர் ஏ. கே. கோபாலன் தலைமை தாங்குவார். அந்தக் கோஷ்டி, கேரளத்தின் தற்கால நிலவரம் பற்றியும் ஜனாதிபதியுடன் விவாதிக்கும்.

## கேரள டேபிள் டென்னிஸ் விளையாட்டுப் போட்டி

எர்ணாகுளம், செப். 10—
கேரள டேபிள் டென்னிஸ் சேம்பியன்ஷிப்புக்கான 7வது வருடாந்திர விளையாட்டுப் போட்டி இங்கு செப். 24-ல் ஆரம்பமாகும். 3 நாள் நடைபெறும் இந்தப் போட்டியில் கேரள ராஜ்யம் பூராவிலுமிருந்து சுமார் 800 ஆட்டக்காரர்கள் பங்கெடுத்துக்கொள்வர்.

## பாரதி இரவு பாடசாலை

### பாரதி விழா கொண்டாடப்பட்டது

சென்னை, செப். 11—
பாரதி இரவுப் பாடசாலையில் இன்றிரவு பாரதி விழா கொண்டாடப்பட்டது. பேச்சுப் போட்டியில் வெற்றிபெற்ற பாடசாலை மாணவி தேவகி, ஆசிரியர்களில் ஒருவரான திரு பி. என். எல்லையா ஆகியோருக்கு முறையே ஒரு பேனாவும் கைத்தறித் துண்டும் பரிசுகளாக வழங்கப்பட்டன. திருவாளர்கள் மா. பக்தவச்சலு, ஜி. பரசுராமன், முருகேசன், என். ரமணி முதலியோர் பாரதி பற்றிப் பேசினர். இறுதியில் மாணவர்களுக்கு இனிப்புகள் வழங்கப்பட்டன.

## பிலிப்பைன் தூதுவரும் நகை கள்ளக்கடத்தலும்

புதுடில்லி, செப். 10—
பிலிப்பைன் தூதுவர் பையில், 7000 டாலர் மதிப்புள்ள நகைகள் கள்ளக்கடத்தலுக்காக வைக்கப்பட்டிருந்ததை போலீஸார் கண்டுபிடித்துவிட்டார்கள்.

**பிரிட்டிஷ் கம்பெனியும்**

ஏற்கலவே பிரிட்டனுக்குச் சொந்தமான பி. ஓ ஏ. ஸி. விமானக் கம்பெனி இந்தியாவிலிருந்து லக்ஷக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள நகைகளை கள்ளக் கடத்தல் செய்து கொண்டிருந்ததை கல்கத்தாவில் சென்ற மாதம் போலீஸார் பிடித்தனர். ஆனால் அதில் பெரிய அதிகாரிகள் பலரும் சம்பந்தப்பட்டிருப்பதாகத் தெரியவரவே, அந்தக் கேஸ் என்னவாயிற்று என்றே தெரியவில்லை.

## சீனாவோடு நேச பூர்வமாகப் பேசுவோம்

### நேருவின் வேண்டுகோளுக்கு வங்க கம்யூனிஸ்ட் கட்சி வரவேற்பு

கல்கத்தா, செப். 11—
எல்லைத் தகராறு சம்பந்தமாக இந்தியாவுக்கும் சீனாவுக்குமிடையே ஏற்பட்டுள்ள தப்பபிப்பிராயத்தையும், தகராறுகளையும் நேசபூர்வமாகப் பேசித் தீர்வு காணவேண்டும் என்று பிரதமர் நேரு ஆலோசனை கூறியுள்ளதை இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் வங்காள மாநில கவுன்சில் வரவேற்றுள்ளது. அல்லது சீனாவுக்கோ ஆக்கிரமிப்பு நோக்கம் இருக்குமென்பதை நம்பவே முடியாது என்றும் கவுன்சில் கூறியுள்ளது.

தகராறுக்குரிய விஷயங்களையெல்லாம் மக்மோகன் எல்லைக்கோடு, எல்லை முழுவதையுமே நிர்ணயித்தல், திபேத்திய படம் பற்றிய பிரச்சினை ஆகிய எல்லாவற்றையுமே இருதரப்பாரின் நல்லெண்ணத்தின் மூலம் பேச்சுவார்த்தையின் மூலம் தீர்த்துக்கொள்ள முடியுமென்றும் அக்கவுன்சில் கூறியிருக்கிறது.

இந்திய-சீன நட்புறவையும், பஞ்சசீலக் கோட்பாடுகளையும் எதிர்க்கின்ற சுயநல வெறியர்கள்தான் இன்று இந்திய சீனாவிற்கிடையே மனக்கசப்பை வளர்க்கத் தீவிர முயற்சி செய்கின்றனர்; இந்திய வெளிநாட்டுக் கொள்கையில் மாற்றம் வந்துவிட்டதென்றும் ஆயுதம் தாங்கி போர் செய்ய வேண்டுமென்றும் அலறித்துடிக்கின்றனர்.

**மௌனம் சாதித்தவர்கள்**

இதே பேர்வழிகள்தான் அமெரிக்கா பாகிஸ்தானில் ராணுவதளம் கட்டியபோது வாய்மூடி மௌனம் சாதித்தனர். போர்த்துகீசிய ஏகாதிபத்தியவாதிகள் அமெரிக்க பிரிட்டிஷ் பின்துணையுடன் கோவாவிலிருந்து வெளியேற மறுத்தபோதும் இவர்கள் மௌனம் சாதித்தனர் என்றும் வங்காள மாநில கம்யூனிஸ்ட் கட்சியின் கவுன்சில் தெரிவித்துள்ளது.

## அணுவிசையால் இயங்கும் பனிக்கப்பல்

### "லெனின்" வெள்ளோட்டம்

### அதிக கனமுள்ள பனிவெளியிலும் தொடர்ந்து பயணம் செய்யும்

மாஸ்கோ செப். 12—
உலகத்திலேயே முதலாவதான அணுசக்தியால் இயங்கும் சோவியத் பனி உடைப்புக் கப்பல் "லெனின்" இன்று தனது முதற் பயணத்தைத் தொடங்கியது.

16,000 டன் நிறையுள்ள இப்பனிக் கப்பல் முதன் முதலாக 1957 டிசம்பரில் கட்டிமுடிக்கப்பட்டது. அப்போதிலிருந்து தொடர்ந்து சோதனைகள் நடைபெற்று வந்தன. நேவாவில் இரண்டு நாட்கள் தங்கியிருந்த பின் இக் கப்பல் மீண்டும் சோதனைகளை மேற்கொள்ளும்.

**கடலில் பல ஆண்டுகள்**

இதில் மூன்று அணுசக்தி "ரியாக்டார்கள்" உண்டு. அவற்றில் ஒன்று "ரிஸர்வ்" ஆக இருக்கும். அதிக சக்தியூட்டப்பட்ட யுரேனியம் ஆக்ஸைடின் சிறிய அளவைக்கொண்டு இதன் இயக்கம் சாத்தியமாக்கப்பட்டுள்ளது குறிப்பிடத் தக்கது. இந்த விசை புதுப்பிக்கப்படாத நிலையிலேயே இக் கப்பல் பல வருஷங்கள் கடலில் இருக்க முடியும்.

**6 அடி பனிக்கட்டியும்**

உலகிலேயே மிக அதிகமான சக்தியுள்ளதெனக் கூறப்படும் இந்தப் பனிக்கப்பல் 44,000 குதிரை சக்தி இயந்திரங்களைக் கொண்டது. ஆறு அடி கனமுள்ள பனி வெளிகளில் இக் கப்பல் நிற்காது தொடர்ந்து பயணம் செய்யும். —ராய்ட்டர்.

## ஆத்திரப்படுவதால் பிரச்சினை தீராது

### சுமுகமான தீர்வுக்கே வழி காண வேண்டும்

### நேரு விளக்கம்

புதுடில்லி, செப். 13—
"இந்திய-சீன எல்லை விஷயம் கடுமையான பிரச்சினையாகும். இப்பிரச்சினையை வெறும் ஆத்திர உணர்ச்சியைக் காட்டுவதன் மூலம் தீர்த்துக் கொள்ள முடியாது" என்று நேரு பாராளுமன்றத்தில் பேசுகையில் குறிப்பிட்டார். எல்லை வகுக்கப்படாத இடங்களிலுள்ள சீன சிப்பாய்களை அகற்றுவதற்கு குண்டு போடவேண்டும், "உறுதியான" நடவடிக்கை எடுக்க வேண்டும் என்று பேசிய பி.சோ., ஜனசங்க அங்கத்தினர்களுக்குப் பதிலளிக்கையிலேயே மக்கள் சபையில் நேரு மேற்கண்டவாறு கூறினர்.

அவர் மேலும் பேசுகையில், "எந்த முகாமிலும் சேராத நடுநிலைமையோடு நிற்கும் இன்றைய கொள்கையை இந்திய அரசாங்கம் என்றும் மாற்றிக் கொள்ளாது. இதுவே நமது லட்சிய பூர்வமான உண்மையாகும். இந்திய எல்லையிலுள்ள ஆறு சீனர்களை அகற்றுவதற்காக மெம்பர் ஒருவர் குறிப்பிட்டதைப் போல இந்தியா குண்டு போடப் போவதில்லை.

**உறுதிக்கும் அளவுண்டு!**

இந்தியா உறுதியாக இருக்க வேண்டும், உறுதியாக இருக்க வேண்டும் என்றும் சொல்லுகிருர்கள். சில முக்கியமான பிரச்சினைகளில் நாம் உறுதியாக இருக்கவேண்டியது தான். இது போன்ற சமயங்களில் உறுதியுடன் இருக்கவேண்டியதுதான். ஆனல் அதற்கும் ஒரு எல்லை வேண்டும், சோவியத் யூனியன், அமெரிக்கா போன்ற வல்லரசுகள்கூட தாங்கள்கடைப்பிடிக்கும் உறுதிக்கு ஒரு எல்லை வைத்திருக்கின்றன. இல்லையெனில் அந்நாடுகள் யுத்தம் என்ற நிலைமைக்குச் சென்று, உலகத்தையே அழித்துவிடும். உறுதியாக இருக்கவேண்டும் என்று சிலர் இஷ்டம் போல் பேசுவது வரவேற்கத்தக்கதல்ல, ஏனெனில் அவ்வாறு பேசுவது முக்கியப் பிரச்சினையிலிருந்து நம்மை திசை திருப்பிவிட்டு விடும், என்று கூறினர்.

**தீர்மானம் போடுவதால்**

நேரு மேலும் பேசுகையில்: "பீகிங்கிலோ அல்லது டில்லியிலோ தீர்மானம் போடுவதாலோ அல்லது ஒருவருக்கொருவர் கடுமையான வார்த்தைகளை பரிமாறிக் கொள்வதாலோ பிரச்சினையைத் தீர்க்கமுடியாது. இப்படிப்பட்ட பிரச்சினையில் பேச்சுவார்த்தையின் மூலம் யுத்தம் ஏற்படுவதைத் தவிர்க்கவே விபரம் அறிந்த ஒவ்வொருவரும் விரும்புவார்கள் மிக சக்திவாய்ந்த நாடுகளே சண்டையின் றிப்பிரச்சினைகளைத் தீர்த்துக்கொள்ள விரும்புகின்றனவென்பது தெளிவு, என்று கூறினர்.

அவர் தொடர்ந்து பேசுகையில், "இந்தியா சீன எல்லைமலைப் பகுதியில் இப்பக்கமோ அல்லது அப்பக்கமோ சில அடி தூரப் பரப்பளவு செல்வதில் எவ்வித வித்தியாசமுமில்லை. இச் சிறிய திட்டுப் பகுதிகளின் பிரச்சினைக்கு சுமுகமான முடிவு காணவேண்டும். ஆனல் ஆக்கிரமிப்பு நோக்கத்தோடோ அவமானப்படுத்தும் நோக்கத்தோடோ, அல்லது பலாத்கார முறையிலோ நாமோ அல்லது சீனமோ நடந்துகொள்வதென்பது வேறு விஷயம்" என்று கூறினர்.

(1-ம் பக்கம் தொடர்ச்சி)

கொள்ளும் வேருெரு படையை அல்லது ஒரு குழுவினரை அனுமதிப்பதற்கு ஒரு சுதந்திர நாட்டிற்கு உரிமையுண்டா? இந்த நாட்டையும் சம்பந்தப்படுத்தி பிறிதொரு நாட்டின் (சீன) மீது யுத்தப் பிரச்சாரம் செய்வதை அனுமதிப்பது தான் ஒரு சுதந்திர நாட்டின் உரிமையா?" என்று கேட்டார்.

**ஆக்கிரமிப்பை எதிர்த்துப் போராடுவோம்**

இந்தியாவுக்கு எதிராக ஏற்படும் ஆக்கிரமிப்பை கம்யூனிஸ்டுக் கட்சி எதிர்க்குமா என்று ஒரு கேள்வி கேட்கப்பட்டது. அதற்கும் பதிலளிக்கையில், "இந்த விஷயத்தில் கம்யூனிஸ்டுக் கட்சி மிகத் தெளிவாகவே இருக்கிறது. யார் நம் மீது படையெடுத்தாலும் அதனை எதிர்த்துக் கம்யூனிஸ்டுக் கட்சி போராடவே செய்யும். படையெடுப்பாளர்களை எதிர்த்து நாங்கள் போராடுவோம். இந்த விஷயத்தில் எந்தவித சந்தேகமும் கொள்ளவேண்டாம். திபேத்தை விடுதலை செய்யவேண்டுமென்று யார் ஆக்கிரமிப்புச் செய்தாலும் அவர்கள் பக்கம் கம்யூனிஸ்டுக் கட்சி நிற்காது. அதே சமயத்தில் சீனத்திலிருந்து எவ்வித ஆக்கிரமிப்பும் ஏற்படாது என்று கம்யூனிஸ்டுக் கட்சி உறுதியாக நம்புகிறது. ஏனெனில் இருநாடுகளும் பஞ்சசீலத்தின் அடிப்படையில் இணைந்துள்ளன. இந்தியப் பிரதமரே இந்தியாவின் மீது சீன ஆக்கிரமிப்புச் செய்யாது என்று கூறியிருக்கிருர். அதே நம்பிக்கையோடு மக்கள் சீனம் இந்தியாவை ஆக்கிரமிக்காது என்று உறுதியாகக்கூற விரும்புகிறேன். மற்ற நாடுகளைப் பற்றி நான் கூற விரும்பவில்லை என்று கூறினர்.

**பஞ்சசீலத்திற்கு தீங்கா?**

கடைசியாக பி. சோ. கட்சியின் தவருன போக்குகளைச் சுட்டிக்காட்டி, தோழர் டாங்கே எல்லோருக்கும் ஓர் உருக்கமான வேண்டுகோள் விடுத்தார்.

அவர் கூறுகையில், "இந்திய கம்யூனிஸ்டுகளாகிய எங்களை நீங்கள் விரும்பும் அளவிற்குத் தாக்கிப் பேசுங்கள். அதற்கு உங்களுக்குப் பூரண சுதந்திரம் உண்டு. ஆனல் பஞ்ச சீலக் கொள்கைக்கு தீங்கு தேடாதீர்கள். யுத்தகெடுபிடி நிலையை ஏற்படுத்தாதீர்கள். பேச்சுவார்த்தையின் மூலமே எல்லை விஷயத்திற்குத் தீர்வுகாண வேண்டும். உறுதியான இந்திய-சீன நட்புறவு பாதுகாக்கப்பட வேண்டும். இருதரப்பிலுமே தவறுகள் இருக்கத்தான் செய்கின்றன" என்ருர். பின்னர் பேசிய ஜோகிம் ஆல்வா என்ற காங்கிரஸ் உறுப்பினர் "பஞ்ச சீலத்திற்குப் பாதகம் ஏற்படும் முறையில் ஒரு வார்த்தை கூட சபையில் உபயோகிக்கக் கூடாது" என்று கேட்டுக் கொண்டார்.

சென்னை

## ஹார்பர் தொழிலாளர் சங்கம் வழிகாட்டுகிறது

### ஏ. ஐ. டி. யு. ஸி. கட்டிட நிதிக்கு மேலும் ரூ. 1,000 நன்கொடை

சென்னை, செப். 12—
இன்று மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கம் இரண்டாவது தவணையாக ரூ. 1000/- "அகில இந்திய தொழிற்சங்க காங்கிரஸ் கட்டிட நிதி"க்கு அனுப்பியுள்ளது. தோழர் காந்தபடன் என்ற டாக் தொழிலாளி சங்க ஆணைப்படி ரூ 3/-ம் மற்றும் கொண்டு ரூ 17/-ம ஆக ரூ. 20/- கொடுத்துள்ளார். இதில் மற்றொரு முக்கியத்துவம் யாதெனில் கரிக்கப்பலில் வேலை செய்யும் தொழிலாளர்கள்மட்டும் சுமார் ரூ. 1500/- வரை கொடுத்துள்ளனர். இன்னும் மும்முரமாகவும், மிகுந்த உற்சாகத்துடனும் வசூல் முன்னேறிக்கொண்டே இருக்கிறது. மதராஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கம் இதுவரை ரூ. 2000/- அனுப்பியுள்ளது."

## கேரளத்தில் ஜனாதிபதி தலையீட்டுக்கு பஞ்சாயத்து கண்டனம்

வேலூர், செப். 7—
வேலூரை அடுத்த கருங்கப்பத்தூர் பஞ்சாயத்து போர்டு கூட்டம் 29-8-59ந் தேதி அன்று தலைவர் கே. பி. ஆறுமுகம் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

கம்யூனிஸ்ட் உறுப்பினர் கேரளத்தில் ஏற்பட்ட ஜனாதிபதி தலையீட்டைக் கண்டித்துத் தீர்மானம் கொண்டுவந்தார். தீர்மானம் ஏகமனதாக நிறைவேறிற்று.

# சீனாவுக்கு எதிராக இமாலய சமஷ்டி

## அமெரிக்கா முயல்கிறது

### 'பிளிட்ஸ்' தரும் தகவல்

புதுடில்லி, செப். 10—
சீனாவை அடுத்துள்ள பூடான், சிக்கிம், நேபாள நாடுகளில் சீனக் கம்யூனிஸ்டு படைகள் புகுந்துவிட்டதாகவும், அந்த நாடுகளையும் இந்தியாவையும் திபேத்துடன் சேர்த்து ஹிமாலய சம்மேளனமொன்றை அமைக்கசீன கம்யூனிஸ்ட் சர்க்கார் முயல்வதாகவும், எனவே, பாகிஸ்தானும் இந்தியாவும் தமது நாடுகளைப் பாதுகாக்க, தமக்குள்ள வேற்றுமைகளை மறந்து ஒன்றுபட்டு போராட வேண்டுமென்றும் சமீபத்தில் அமெரிக்காவின் நியூயார்க் டைம்ஸ் பத்திரிகை தலையங்கம் எழுதியது. அதன் குரலையே இங்குள்ள பி. சோ. கட்சியும், ஜனசங்கமும், காங்கிரஸ் தலைவர்கள் பலரும் எதிரொலித்தனர். பிரதமர் நேரு கூட சிக்கிம், பூடான், நேபாள நாடுகளில் சீனக் கம்யூனிஸ்டுகள் ஊடுருவியதாகக் குற்றம் சாட்டினர்.

ஆனல், பூடான், சிக்கிம், நேபாள மந்திரிகள்அப்படி சீனப் படைகள் எதுவும் தங்கள் நாடுகளுக்குள் பிரவேசிக்கவில்லை யென்று பகிரங்கமாக மறுத்துவிட்டனர். சீனத்தைத் தொட்டுக் கொண்டிருக்கும் கிழக்குப் பஞ்சாப் எல்லைக்குள் சீனக் கம்யூனிஸ்டு படைகள் வந்துவிட்டதாகவும் ஜனசங்கமும், பி. சோ. கட்சியினரும் பிரச்சாரம் செய்தனர். அதையும் பஞ்சாப் சர்க்கார் மறுத்து விட்டது

சிக்கிம், பூடான், நேபாளம் ஆகிய மூன்று சிறு நாடுகளையும் ஒன்ருக திபேத்துடன் இணைத்து சம்மேளனம் அமைக்க சீனதான் முயற்சிப்பதாக அமெரிக்காவும் அதன் ஆதரவாளர்களும் பிரச்சாரம் செய்தார்களே, அதன் உண்மை என்ன?

இதுபற்றி பிளிட்ஸ் பத்திரிகை கூறுவதாவது:

"இந்தியாவும் பாகிஸ்தானும் கூட்டாக பாதுகாப்பு ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டுமென்றும், அதற்கு தென்கிழக்கு ராணுவக் கூட்டணியும் உதவி செய்யுமென்றும், பிறகு பூடான், சிக்கிம், நேபாளம் ஆகிய நாடுகளை காஷ்மீருடன் இணைத்து ஒரு சம்மேளனமாக்கி, அதை இந்திய-பாக் பாதுகாப்பு ஒப்பந்தப்படி, சீனவுக்கு எதிராகத் திருப்பிவிட வேண்டுமென்றும் அமெரிக்கா திட்டம் வகுத்திருப்பதாகவும், இந்தத் திட்டத்தை உலகறியாமல் செய்வதற்காகவே, சீன மீது பழியைப்போட பிரச்சாரம் முடுக்கிவிடப்படுவதாகவும் பிளிட்ஸ் பத்திரிகை கிருபர் 29-8-59-ல் எழுதியுள்ளார்.

மல் யுத்தம் :

# இந்திய வீரர் தாராசிங் மீண்டும் ஜெய பேரிகை!

## உலகப் புகழ்பெற்ற பாரனை தோற்கடித்தார்

சென்னை, செப். 13—
**சென்னை நகரம் இதுவரை கண்டிராத மல்யுத்தம் இன்று தென் கிழக்கு ஆசிய சாம்பியன் பாரன்வான் ஹெக்ஸிக்கும் இந்திய வீரர் தாராசிங்குக்கும் நடைபெற்றது. இந்த மிக முக்கிய சவால் சண்டையில் பாரனைத் தோற்கடித்து தாராசிங் இந்தியாவின் கீர்த்தியை நிலைநாட்டினர்.**

பாரன்வான் ஹெக்ஸி உலக சாம்பியனை ஆர்தர் ஸோடு போட்டி போடப்போகிறவர். அதோடு தாரா சிங்கை தோற்கடிப்பதற்காகவே இந்தியா வந்துள்ளதாக சவால் விட்டவர். ஆகவே, இந்தச் சண்டையை பொதுமக்கள் வெகு ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தனர். ரசிகப் பெருமக்கள் எதிர்பார்த்தபடியே ஆரம்ப முதலே சண்டை மிக விருவிருப்பாகவும் ரோஷமாகவும் இருந்தது. தாராசிங் ரொம்பவும் சுறுசுறுப்போடும் புத்தி சாதுர்யத்தோடும் சண்டை செய்து மக்களின் ஆரவாரத்தைப் பெற்ருர். முதல் ரவுண்டில் பாரனின் கால்களிடையே தனது காலைச் செலுத்தி கிடுக்கிப் பிடி போட்டு, அந்த மைதானமே எதிரொலிக்கும்படியாகக் கதற வைத்துவிட்டார். நேற்று போலவே இன்றும் பாரன் தலைமயிரைப் பிடித்து இழுப்பதும் குத்துவதுமாக 'பவுல்' ஆட்டம் ஆடினர். மக்கள் இதைஆட்சேபித்து ஓயாது கண்டனம் செய்து கொண்டிருந்தனர். அதோடு சண்டை ஆரம்பமானதுமுதலே கிங்காங் மேடையின் ஓரத்தில் நின்றுகொண்டு பாரனுக்கு ஏதேதோ போதனை செய்து கொண்டிருந்தார். இதையும் ரசிகர்கள் எதிர்த்தனர். இவ்விதம் முதல் ரவுண்டு சமஜதையாக முடிந்தது.

இரண்டாவது ரவுண்டில் சண்டையின் வேகமும் உக்கிரமும் இன்னும் அதிகரித்தது. பாரனின் அபாயகரமான பிடியிலிருந்து தாரா மிகவும் லாவகமாகத் தப்பி பொதுஜனங்களின் காது செவிடுபடும்படியான கரகோஷத்தைப் பெற்ருர். அதோடு இந்த ரவுண்டில் பாரனை ரிங் கயிற்றில் மோதி, நெஞ்சிலே ஓங்கி அடித்து, கீழே வீழ்த்தி 'பாடி பிரஸ்' செய்து ஒரு பாயிண்ட் பெற்ருர் தாரா. அவ்வளவு தான் கூடியிருந்த ஆயிரக்கணக்கான ரசிகர்களது சந்தோஷ ஆரவாரத்துக்கு எல்லையில்லாமல் போய் விட்டது.

இந்தத் தோல்விக்குப் பிறகு பாரன் எப்படியும் தாராவை வீழ்த்த படாத பாடுபட்டுப் பார்த்தார். ஆனல் தாராவை அசைக்க முடியவில்லை. ஆகவே அளவுக்கு மீறி 'பவுல்' செய்ய ஆரம்பித்தார். இதனல் 'ரெப்ரி' அவருக்கு முதல் எச்சரிக்கை கொடுத்தார், மூன்ருவது ரவுண்டும் சமஜதையாக முடிந்தது.

பிறகு நான்காவது ரவுண்டில் சண்டை நடந்து கொண்டிருந்த போது மேடைக்கு அருகில் நின்றுகொண்டிருந்த கிங்காங் தாராசிங் காலைத் தட்டிவிட, அவர் கீழே விழ, இதுதான் சமயம் என்று பாரன் அவர் மீது விழுந்து 'பாடிபிரஸ்' செய்தார். 'ரெப்ரி'யும் விவரம் தெரியாமல் பாரன் ஒரு பாயிண்ட் பெற்றுவிட்டதாக அறிவித்தார். ஆனல் பொது மக்கள் மிகுந்த ஆக்ரோஷமடைந்து இந்த முடிவை எதிர்த்தனர். உண்மையையும் தெரிவித்தனர். நடந்ததை 'ரெப்ரி' தெரிந்துகொண்டபிறகு தனது பழைய முடிவை மாற்றிக் கொண்டு, பாரனை சண்டை செய்ய லாயக்கற்றவராக்கியதோடு தாரா வெற்றி பெற்றதாகவும் அறிவித்தார். மைதானமே குலுங்க மக்களின் மகிழ்ச்சி ஆரவாரம் எழுந்தது.

வெற்றி பெற்ற தாராவுக்கு கேஷனல் டுபாக்கோ கம்பெனியார் ஒரு பெரிய வெள்ளிக் கோப்பை பரிசளித்தனர்.

**கருஞ்சிலந்தி-அஜீத் சிங்**

இதற்கு முன்னதாக அமெரிக்காவின் 'மர்ம மல்லன்' கருஞ்சிலந்தியும் இந்தியாவின் உதய நட்சத்திரம் அஜித் சிங்கும் சண்டை செய்தனர். அஜித் சிங் அபாரமாக மற்போர் செய்தார். கருஞ்சிலந்தியின் மண்டையில் மோதி மோதி அவரைத் திணறவைத்தார். இந்த அடியைத் தாங்கமுடியாது பயந்து இருமுறை கருஞ்சிலந்தி மேடைக்கு வெளியே குதித்து ஓடியது வேடிக்கையாக இருந்தது. வழக்கம்போல் கருஞ்சிலந்தி ஆரம்பமுதலே தப்பாட்டம் ஆடினர். முதல் மூன்று ரவுண்டுகள் சமஜதையாக முடிய நான்காவது ரவுண்டில் அமெரிக்காவின் கீர்த்திமிக்க மல்லரான கருஞ்சிலந்தியை கண்மூடி கண் திறப்பதற்குள் கீழே வீழ்த்தி அஜித் சிங் ஒரு பாயண்ட் பெற்ருர். ஆனல் ஐந்தாவது ரவுண்டில் கருஞ்சிலந்தி அஜித்தை கதிரடித்ததுபோல் மேலே தூக்கி தரையில் ஓங்கியடிக்க, 'ரெப்ரி' பத்து எண்ணுவதற்கு முன் அஜித் சிங்கால எழுந்திருக்க முடியவில்லை. இதனல் கருஞ்சிலந்தி வெற்றிபெற்றதாக அறிவிக்கப்பட்டது.

ஆரம்பத்தில் ஜின் மர்பிக்கும் தல்ஜித்ராவுக்கும் நடைபெற்ற சண்டையில் இருவரும் மேடைக்கு வெளியே போய் விழுந்து பத்து எண்ணுவதற்குள் அரங்கத்திற்கு வராததால் சண்டைக்கு லாயக்கற்றவராக்கப் பட்டனர்.

இதனை அடுத்து நடைபெற்ற பீட்டர் குமாலி-டைகர் சூசா சண்டை நன்ருய் இருந்தது, இருவரும் பவுல் இல்லாமல் தங்களது வீர சாகசங்களை எல்லாம் காண்பித்து ரசிகர்களின் பாராட்டுதலைப் பெற்றனர். ஆறு ரவுண்டுகள்வரை நடைபெற்ற இந்த சண்டையில் ஆளுக்கொரு பாயிண்ட் எடுத்ததால், சமஜதையாயினர்.

மற்போர் காண இன்று பெரும் திரளாக மக்கள் கூடியிருந்தனர்.

## சீனாவில் எங்கும் பொதுக்கூட்டங்கள்

ஹாங்காங், செப். 12—
சீன-இந்திய எல்லை விஷயத்தில் சீன சர்க்கார் எடுத்துள்ள முடிவை ஆதரித்து சீனாவின் பிரதான நகரங்களான பீகிங், டீன்ஸ்டின், ஷாங்ஹாய், கான்டன், வூஹான் முதலிய இடங்களில் மாபெரும் பொதுக் கூட்டங்கள் நடைபெற்றன.

ஜனசக்தி அச்சகத்தில் அச்சிட்டு, வெளியிட்டவர் எஸ். கிருஷ்ணசாமி. ஆசிரியர்; ப. ஜீவானந்தம். முகவரி: 32, பிராட்வே, சென்னை-1.
Janasakthi
Broadway, Madras-1.